*Kumaraṉ*

*Āram 5, muttu 16*

*December 01, 1927*

Record no. 313

Registered No. M. 1823
Tel: KUMARAN, KARAIKUDI.

உ
சிவமயம்.

தனிப்பிரதி
விலை அணு ஒன்றரை.



# குமரன்

"என்கடன் பணிசெய்து கிடப்பதே."

(வாரப் பதிப்பு.)

வியாழன் தோறும் வெளியிடப் பெறுவது.

" கதரே உயிர். "

" கருணையே தெய்வம். "

ஆரம் ரு. முத்துகசு. } காரைக்குடி. பிரபவ-ஹு கார்த்திகை - மீ கசு - உ (1—12—27) { கசு பக்கங்கள்.

## சிறையிருந்த செல்வி.

திருவாளர் ரா. பி. சேதுப்பிள்ளை பி. ஏ., பி. எல்.



பூவினை வெறுத்து அயோத்தி மன்னனது பொன்மனை புகுந்து கணவனுடன் நாடு துறந்து காடு புகுந்த கமலச் செல்வியை இலங்கைவேந்தன் தங்கை தன் கண்களால் நோக்கினுள். பெண்மையும் வியந்து பேது றும் பேரழகு வாய்ந்த சீதையைக் கண்ட தன் கண்ணும், கருத்தும் பிற பொருள்களிற் செல்லாமை கண்ட சூர்ப்பனகை,

" கண் பிற பொருளிற் செல்லா
கருத்தெனில் அஃதே கண்ட
பெண் பிறந் தேனுக் கென்றால்
என்படும் பிறருக் கென்று "

திகைத்து நின்றாள். அப்பால் இம்மங்கை மானபங்க மடைந்து இலங்கைமா நகரில் இணையற்ற வேந்தனுய் விளங்கிய தன் தமையனிடம் முறையிடச் சென்றாள். செம்மை சான்ற சீதையின் அழகை அரக்கர்கோனது செவிவாயிலாக மனத்தில் வார்த்து, அவ் வெறிகொண்ட வேந்தனால் சீதையைக் கவர்ந்து தன் மானமழித்த மனிதரது செருக்கைச் சிதைக்கக் கருதினாள். திருமகளது திருந்திய நலத்தைச் சிறிது சொல்லியும், சொல்லாமல் மறைத்தும் அரக்கனது மனத்தில் ஆசை யென்னும் அனலை வைத்தாள்.

* * *

" தோளையே சொல்லு கேனே
சுடர்முகத் துலவு கின்ற
வாளையே சொல்லு கேனே
அல்லவை வழுத்து கேனே
மீளவும் திகைப்ப தல்லால்
தனித்தனி விளம்ப லாற்றேன்
நாளையே காண்டி யன்றே
நானுனக் குரைப்ப தென்னே ? "

ஐயனே ! அம் மங்கையின் தோள்களைச் சொல்வேனே ? அல்றி அவளது ஒளி பொருந்திய முகத்தில் உலாவுகின்ற வாளனைய கண்களைச் சொல்வேனே ? மற்றைய அங்கங்களின் மாண்பைச் சொல்வேனே ? நங்கையின் நலங்களைக் கண்டு மனம் திகைப்ப தல்லால் அவை சொல்லும் தகையனவோ ? அன்றியும், நீ நாளையே சென்று அந்நலங்களைக் காண்பாயாதலின் நான் சொல்லவும்வேண்டுமோ என்று வினயமாய் மன்னன் மனத்தில் மதுவை யூட்டினாள். பின்னும், மையலில் ஆழ்ந்த மன்னனை நோக்கி, ஐயனே !

" வில் ஒக்கும் நுதலென் றாலும்
வேலொக்கும் விழியென் றாலும்
பல் ஒக்கும் முத்தென் றாலும்
பவளத்தை இதழென் றாலும்
சொல் லொக்கும் பொருள் ஒவ்வாதால்
சொல்லலாம் உவமை யுண்டோ
நெல் லொக்கும் புல்லென் றாலும்
நேர்உரைத் தாக வற்றே "

அம்மங்கையின் நுதலை வில்லென்றாலும், விழியை வேலென்றாலும், பல்லை முத்தென்றாலும், வாயைப் பவளமென்றாலும் சொல்லால் ஒக்குமேயன்றிப் பொருளால் ஒவ்வாதாம். ஒப்புமையில்லா அவ்வங்க நலங்களுக்கு உவமையும் சொல்ல இயலுமோ ? என்று மூக்கிழந்த மங்கை மிக நயமாய் முறையிட்டாள். இம்மொழிகளைக் கேட்ட மன்னன் தன் தங்கைக்காக அமர்புரிந்து ஆவிதுறந்த கரனையும் மறந்தான். தங்கையின் மானத்தால் தனக்கு நேர்ந்த கடும் பழியையும் மறந்தான். மானம் சிதைத்த மனிதரது வரையிகந்த வலிமையையும் மறந்தான். அயல் மாதைத் தீண்டின் தலை வெடிக்குமென்று அயன் அருளிய சாபத்தையும் மறந்தான். செவியாரக் கேட்ட சீதையை மறவாது தன் உள்ளத்தில் அந்நங்கையை அழகொழுக எழுதி அவ்வுயிர் ஓவியத்தைக் கண்டு உளம் களித்தான். அசோக வனத்தில் அருஞ்சிறை வைப்பதன் முன்னமே அரக்கர்கோன் அழகிற் சிறந்த அம்மங்கையைத் தன் மனச் சிறையில் வைத்து மகிழ்ந்தான்.

" மயி லுடைச் சாயலாளை
வஞ்சியா முன்னம் நீண்ட
எயி லுடை இலங்கை நாதன்
இதயமாம் சிறையில் வைத்தான் "

என்று கம்பர் அரக்கனது செயலை அழகாகக் கூறி அருளினார். இவ்வாறு பூவினை நீத்து வந்த புனித நங்கை, அரக்கனது புன்மனம் புகுந்தாள்.

* * *

மங்கையை மனத்தில் வைத்த மன்னவன் அவளது நலங்களையே நினைந்து நினைந்து நலிவானாயினான். காதலின் வெம்மையைத் தாங்கமாட்டாது காவலன் கலங்கினான். மணங்கமழும் மல்லிகைத் தென்றல் வீசிய போது மன்னன் சீறுவான். குளிர்ந்த மதியைக் கண்டபோது மன்னவன் கொதித்துச் சாம்புவான். இவ்வாறு மையல் நோயால் நையலுற்ற இலங்கை மன்னன் தன் மாமனை மாரீசனை மாய மானாக அனுப்பி மங்கையின் மனத்தை மயக்கி வீரர் இருவரும் இல்லாதபோது மாயத்தால் சீதையைக் கவர்ந்து இலங்கைமா நகரில் ஓர் அழகிய சோலையில் சிறை வைத்தான். இவ்வாறு நஞ்சனைய இலங்கைநாதனது மனத்திலும் மனையிலும் புகுந்து சிறுமை யெய்திய தன் நிலையை நினைந்து சிந்தையழிந்த சீதை,

" வஞ்சனை மானின் பின்
மன்னனைப் போக்கி, என்
மஞ்சனை வைது பின்
வழிக்கொள் வா யென்
நஞ்சனை யான் அகம் புகுந்த
நங்கை யான்
உஞ் சனன் இருத்த லும்
உலகம் கொள் ளுமோ "

என்று வருந்துவாளாயினாள். அந்தோ! பொன் மானாக வந்த மாயமானைக் கண்டு மயங்கி, அதனைப் பிடித்துத் தருமாறு என் தலைவனை அனுப்பினேன். மானைத் தொடர்ந்து சென்ற மன்னனுக்குத் தீங்கு நேர்ந்ததென்று மதி மயங்கி, மனம் பதைத்து, என்னைக் காத்து நின்ற இளைய வீரனைக் கடிந்து தலைவன் போனவழியே போக்கினேன். இவ்வாறு எவரும் துணையின்றி எளியளாய் நின்ற என்னைக் கள்ள அரக்கன் கவர்ந்து அசோக வனத்தில் அமைத்தான். நிறையமைந்த மாதர் பிறர் நெஞ்சு புகாராதலின் இவ்விலங்கை வேந்தனது மனத்திலும், மனையிலும் புகுந்த என்னை இனி உலகம் ஏற்குமோ என்று சீதை கூறும் சொற்களில் இவ்விருவகைச் சிறையும் இனிது விளங்குகின்றது.

* * *

கருங்கடல் சூழ்ந்த இலங்கைமா நகரில் கற்பக தருக்கள் நிறைந்த கனகச்சோலையில் கானகப் புல்லினால் இலக்குவன் வேய்ந்த இனிய சாலையில் மெலிந்த மேனியோடும், கலங்கிய கண்களோடும் சிறையிருந்த செல்வியைத் தன் கண்களாற் கண்ட அனுமன்,

" வேலையுள் இலங்கை என்னும்
விரி நகர் ஒருசார் விண்தோய்
காலையும் மாலைதா னும்
இல்ல தோர் கனகக் கற்பச்
சோலையங் கதனில் உம்பி
புல்லினால் தொடுத்த தூய
சாலையில் இருந்தாள், ஐய !
தவம் செய்த தவமாம் தையல் "

என்று இராமனிடம் இனிதெடுத் துரைத்தான். சீதையைச் சிறையினின்றும் விடுவித்து, தன் வீரத்தையும் மானத்தையும் காக்குமாறு இராமன் வலிமைசான்ற தம்பியோடும், வானரத் தலைவரோடும் இலங்கைமா நகரம் போந்து இரக்கமற்ற அரக்கருடன் போர் புரிந்து அவரது வெங்குலத்தை வேரறுத்தான். இலங்கைநாதனும், அயோத்தி அண்ணலும் நெடும்பொழுது கண்டவர்க்கன்றிக் கேட்டார்க்குரைப்பரும் கணக்சில் கடும்போர் நிகழ்த்தினார்கள். விலக்கலாகாத விதியின் பயனால் இலங்கை வேந்தனும், இராம பாணத்தால் ஆவியிழந்து பூமியில் விழுந்தான். போர்மகளைத் தழுவிய பொருப்பனைய தோள்களால் பார்மகளைத் தழுவினான். திருமகள் ஒளியும், கலைமகள் ஒளியும் ஒன்றித்திகழ்ந்த உயரிய முகங்களை நிலமகள்மீது நெடிது வைத்தான். வாளும், யாழும் தழுவிய வலிய கரங்கள், வெட்டுண்ட வாழைபோல் வீழ்ந்து கிடந்தன. இலங்கை நாதனது எழிலொழுகும் திருமேனியை எள் ளிருக்கவும் இடமின்றி இராமபாணம் துளைத்திருந்தது. இத்தகைய கோலத்தை மையறு மனத்தளாய மண்டோதரி கண்ணுற்றாள். மரங்களும், மலைகளும் உருக, வாய்திறந்து இரங்கினாள், மயங்கினாள். அந்தோ! வெள்ளெருக்கம் மலரணிந்த வேணியான் மலையெடுத்த வேந்தே! உன் திருமேனியில் பாய்ந்த அம்பு உயிர்நிலை யறியாது தலை முதல் தாள் வரை தேடிய முறையில் இவ்வாறு துளைத்ததோ ? அன்றித் தேன் கமழும் கூந்தலாளாய திருமகளை, ஐயனே! நீ, மனச்சிறையில் மறைத்துவைத்த மையல் மாளாது உள்ளிருக்குமெனக் கருதி அவ்வாளி உடல் புகுந்து தடவியதோ ? என்று மயன் மகள் பன்னியமொழிகள் கருங் கல்லையும் கரைக்கும் தகையனவாம்.

" வெள்ளெருக்கம் சடைமுடியான் வெற்
திருமேனி மேலும் கீழும் [பெடுத்த
எள்ளிருக்கும் இடனின்றி உயிரிருக்கும்
இடம் நாடி இழைத்தவாதோ
கள்ளிருக்கும் மலர்க்கூந்தல் சானகியை
மனச்சிறையில் கரந்த காதல்
உள்ளிருக்கும் எனக்கருதி உடல்புகுந்து
தடவியதோ ஒருவன் வாளி "

என்று, அஞ்சன மலையின்மீது அழகிய மயில் சாய்ந்தாற்போல விழுந்தாள். தேவர்க்கும் தெரிவரிய தெய்வக்கற்பு வாய்ந்த திருமகளைத் தன் மனச்சிறையில் வைத்த மன்னனது தலைமுதல் தாள்வரை அணு அணுவாய் ஆராய்ந்து அவன் கரந்த காதலைக் களையக் கருதி அவ்வாறு துளைத்ததோ, என்று கவி கூறும் கனிந்த மொழிகளில் மனச்சிறையை மீண்டும் நம் கண்ணெதிரே எழுதிக் காட்டும் கவி நயம் சாலவும் அழகியதாகும். இலங்கைக் காவலனது மனத்தில் வேரூன்றிய காதலை அகழ்ந்தெடுத்து, சீதையை அகச்சிறையினின்றும் விடுவிப்பதே அம்மங்கையின் கற்பு நெறிக்கு அமைந்ததாகும் என்று கருதி இராமபாணம் உடல் முழுமையும் ஆராய்ந்து, சோதித்ததாகக் கம்பர் அமைத்த கற்பனை கற்றோர் கருத்தைக் கவர்வதாகும். வீரனது ஒளிபொருந்திய வாளி, உயிர் நிலையை நாடிச் சென்றதோ என்றும்; சீதையின் சிறையைத் தடவிச் சென்றதோ என்றும் கவி அமைத்த சொல் அமைதி ஆராய்தற்குரியதாகும். ஒருவனுக்குரிய பொருளை அவன் கருத்திற்குமாறாக களவு செய்த ஒருவன் அதனை எவரும் அறியாதவாறு ஒளித்தும், மறைத்தும் பாதுகாக்கும் இயல்புபோல் இராமனது மனைவியாய சீதையைக் களவு செய்து தன் இதயத்தில் எடுத்தமைத்த இராவணன் அவ்வரும் பொருளின் அருமையை

# இந்து மதச் சீர்திருத்தம்.

பாஞ்சால முடிசூடா மன்னராகத் திகழும் லாலா லஜபதிராய் அவர்கள் 'பீப்பிள்' பத்திரிகையில் எழுதியிருக்கும் ஓர் கட்டுரையின் மொழி பெயர்ப்பு வருமாறு:—

## உண்மை மணத்தின் நோக்கம்.

மணவினை சம்பந்தமாகத் தற்பொழுது இருந்துவரும் பழக்கவழக்கங்களையும் அனுஷ்டானங்களையும் பெரிதும் மாற்றாமல் இந்து சமூகத்தைத் திருத்தி அமைத்தலென்பது முடியாத காரியமாகும். மணவினை ஓர் ஒப்பந்தமாக விருந்தபோதிலும் அல்லது ஓர் மதச் சடங்காயிருந்தபோதிலும் கீழ்க்காணும் விஷயங்கள் முக்கியமாகக் கவனிக்கப்படல் வேண்டும்:—

(க) கலியாணம் செய்து கொண்ட சதிபதிகளின் இன்ப வாழ்க்கையும் உடல் நலமும். (உ) அவர்கட்குப் பிறக்கும் குழந்தைகளின் நல உரிமைகள். (ங) சமூகத்தின் நலம். முற்காலத்தில் இந்து மதச் சாத்திரங்கள் செய்தோர் மணவினை சம்பந்தமாக விதிகள் ஏற்படுத்தியபொழுது மேற்குறித்தவைகளைப் பெரிதும் கவனித்திருக்கின்றனர் என்பதில் எனக்குச் சந்தேகமில்லை. புராதன இந்து கலியாண விதிகளையும் ஐரோப்பியர்களது கலியாண விதிகளையும் நான் நன்கு பரிசீலனைசெய்து அவற்றை ஒன்றோடொன்று ஒப்பிட்டுப் பார்த்ததில் புராதன இந்துக்களது மண விதிகள் சதிபதிகட்கு எவ்வளவு இன்பம் வழங்க இயலுமோ அவ்வளவு இன்பம் வழங்கினவென்றும் சமூகத்திற்கும் அவ்வளவு நலன்களை வழங்கினவென்றும் தெரிந்துகொண்டேன். பிற்காலத்தில் இந்துசமூகத்தில்ஏற்பட்டபற்பல மாறுதல்கள் காரணமாகவும் அவ்வப்போதிருந்த நிலைமைகள் காரணமாகவும் பிரஸ்தாப விதிகள் பலவித மாற்றங்கள் அடைந்தன.

## காலத்திற்கேற்ற மாற்றம்.

மணவினை ஓர் சமஸ்காரமாகக் கருதப்படினும் அது ஓர் சமூக சம்பந்தமான சடங்கு என்பதில் ஐயமில்லை. எந்த சமூகச் சடங்கும் மாற்றப்பட முடியாத நிலைமையிலும் திருத்தப்பட முடியாத நிலைமையிலும் இருக்க முடியாது. சமூகச் சடங்குகள் சமூகத்தின் தேவைகளை முன்னிட்டு ஏற்பட்டவைகளேயன்றி வேறல்ல. அத்தேவைகளை அவைகள் பூர்த்தி செய்கின்றன. சமூகத்தின் நிலைமையும் தேவைகளும் மாறுதலடைந்துகொண்டே யிருக்கின்றன. அவைகள் (அம் மாறுதல்கள்) ஸ்திரமானவைகளல்ல. எனவே பிற்காலத்தில் தோன்றிய இந்து சாத்திரக்காரர்கள் தம் சமூக சம்பந்தமான விதிகளைத் தங்களது அனுபவத்திற்கு ஏற்றவாறும், சமூகத்தின் அவ்வக்காலத்திய நிலைகட்கும் தகுந்தவாறும், காலப்போக்கிற்கு ஏற்றவாறும் மாற்றினர். கடந்த நூற்றைம்பது வருஷங்களாக இந்துக்கள் அரசியல் துறையில் விடுதலை பெற்றவர்களா யிருந்திருப்பார்களாயின் தங்களின் மதவிதிகளில் எவ்வளவோ மாற்றங்கள் செய்துகொண்டிருப்பார்கள். பிரிட்டிஷாரது அரசியல் ஆதிக்கம் இந்துக்களை அவ்வாறு செய்யமுடியாது தடுத்தது. ஆங்கில ராஜாங்க சாஸ்திரக் கொள்கையை அவர்கள் இந்துக்களது பழக்கவழக்கங்களை நிதானிப்பதில் உபயோகித்ததால் இந்து சமூகம் தற்பொழுது இருந்துவரும் கேவலமான நிலையில், துன்பகரமான நிலையில் இருந்துவருகின்றதென்னலாம். ஏதாவது ஓர் விதி நீதிமன்றத்தின் மூலமாகச் செயலில் கொண்டுவரப்பட வேண்டுமாயின் அவ்விதி நெடுங்காலமாக வழக்கத்தில் இருந்து வரவேண்டுமென்று கூறுவது ஏதேச்சாதிகாரச் செயலாகுமே யன்றி வேறல்ல.

## இந்து லா.

இந்துலா என்று கூறப்படும் சட்டத்திற்குப் பற்பல மாகாணங்களிலும் பற்பல விதமான வியாக்கியானங்கள் செய்யப்பெற்றுள்ளன. வெவ்வேறு மாகாணங்களிலும் வெவ்வேறு விதமாகப் பொருள்கூறப்பட்டிருப்பதும் பழக்கவழக்கங்கள் இருந்து வருவதும் ஆங்காங்குள்ள தேவைகளையும் நிலைமைகளையும் காரணமாகக் கொண்டேயாம். பிரிட்டிஷ் அரசாங்கத்தார் இந்நாட்டின் அரசியலைக் கைப்பற்றிக் கொண்டதும் தங்களது நீதிமன்றங்களுக்குச் சட்டவிதிகளை மொழிபெயர்த்து விளக்கும் பொருட்டுச் சிற்சில பண்டிதர்களை நியமித்துக்கொண்டார்கள். இவர்கள் கூறியவற்றுள் சில முற்றும் தவறென்றும் பொருத்தமற்றவைகளென்றும் பெரிதும் இழிவானவைகளென்றும் நன்கு நிரூபிக்கப்பட்டுவிட்டன. எனினும் பிரிட்டிஷ் நீதிமன்றங்கள் அவற்றில் திருத்தங்கள் செய்ய மறுக்கின்றன. முன் வழக்கங்களால் கட்டுண்டு வங்காள உயர்தர நீதிமன்றத்திலுள்ள பண்டிதர்கள் விளக்கியவாறே சட்டங்களை அமுலுக்குக் கொண்டுவர எண்ணுகின்றனர். உதாரணமாக மகளின் மைந்தனை ஸ்வீகாரம் எடுத்துக் கொள்ளும் விஷயத்தைக் கவனிப்போம். மகளின் மைந்தனை ஸ்வீகாரம் செய்துகொள்வது தவறென்றும், சட்டப்படி செல்லாதென்றும் முன்னர் இந்துலா விளக்கப்பட்டிருப்பது முற்றும் தவறு என்று நன்கு நிரூபிக்கப்பட்டுள்ளது. அலகபாத் உயர்தர நீதிமன்றம் அதனைத்திருத்தி நியாயமான முறையைக் கையாள ஓர் சந்தர்ப்பத்தில் முயற்சித்தது. ஆனால் பிரீவி கௌன்ஸில் சபையார், பல நீதிமன்றங்களில் கூறப்பட்டுள்ள தீர்ப்புக்களால் அனுமதிக்கப்பட்டுள்ள ஓர் வழக்கத்தை அலகபாத் உயர்தர நீதிமன்றத்தின் பிரஸ்தாப தீர்ப்பு மாற்றிவிடுமென்று கூறி அதனை மாற்றிவிட்டனர்.

## வழக்கம்.

ஓர் வழக்கம் பெரும்பாலோரால் ஏற்றுக்கொள்ளப்பட்டு அனுஷ்டிக்கப்பட்டு வருமாயின் அது நல்ல வழக்கமேயாகும். ஆனால் சிலர் தம் மனப்போக்குப்படி அனுஷ்டிப்பவைகளுக்கும் அனைவரும் பொதுவாக அனுஷ்டித்து வரும் வழக்கத்திற்கும் வேறுபாடுண்டென்பதை ஒவ்வொருவரும் அறியவேண்டும். இந்துசமூகத்தைச் சார்ந்த வைதீகர்கள் எதிர்ப்பதால் சமூகச் சீர்திருத்த சம்பந்தமான சட்டங்களை சட்டசபைகள் நிறைவேற்ற முற்படுவதில்லை. நெடுங்காலமாக அனுஷ்டானத்தில் இருந்து வராத வழக்கங்களை நீதிமன்றங்கள் அனுபவத்திற்குக் கொண்டுவரமாட்டா. இது ஓர் பரிதாபகரமான நிலையாகும். சமூகச் சீர்திருத்த சம்பந்தமான ஓர் விஷயத்தை அனைவரும் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்பது முடியாத காரியமாகும். இதன் பயனுக ஏற்படுவதென்ன? நீதிமன்றங்கள் இந்துலாவின் ஓர் குறிப்பிட்ட வியாக்கியானத்தைப் பின்பற்றுவதாயின் அவ்வியாக்கியானம் சட்டசபையால் மாற்றப்படாவிடின் அதனையே பின்பற்றிக்கொண்டிருக்கவேண்டும் என்பதேயாகும். இந்து சமூகத்தினர் அனைவருமோ அல்லது ஒரு சிறு தொகையினரைத் தவிர ஏனையோர் அனைவருமோ சமூக சம்பந்தமாகச் செய்யப்பட வேண்டிய மாற்றங்கட்குச் சாதகமாயிராவிடில் அவை பற்றி சட்டங்கள் இயற்ற சட்டசபைகள் மறுக்கின்றன. இவ்விதநிலை நகைப்பிற்கிடமாகும், பரிதபிக்கத்தக்கதாகும். எனினும் இவ்விதநிலையில்தான் நாமிருந்துவருகின்றோம்.

## இளமை மணம்.

பெண்களைப் பன்னிரண்டு வயதிற்குள்ளாகக் கலியாணம் செய்துகொடுக்கும் வழக்கத்திற்கு இந்து மக்களில் பெரும்பாலோர் விரோதமாயிருக்கின்றனர். ஆயினும் அவர்கள் அனைவரும் ஒன்றுபட்ட அபிப்பிராயம் கொண்டவர்களாயிருக்கவில்லை. ஒவ்வொரு இந்துவையும் எவ்விதத்திலும் கட்டுப்படுத்தாத சில மேற்கோள்களை சிலர் ஆதாரமாகக் கொண்டிருக்கின்றனர். எனவே சட்டசபைகள் அதுபற்றி சட்டங்கள் இயற்றலாகாது. வைதீகர்கள் பதினொரு வயதிற்கு மேற்பட்ட பெண்களுக்குச் செய்யப்படும் மணங்களெல்லாம் செல்லத்தகாதவைகள் என்று கூறியபோதிலும் அதிக வயதில் கலியாணம் செய்வதைத் தடைசெய்யும் சட்டம் எதுவும் அமுலிலில்லை. கலப்பு மணம் பற்றியும் விவாக ரத்தைப் பற்றியும் சிறிது ஆராய்வோம். ஓர் வைசியன் ஓர் க்ஷத்திரியப் பெண்ணை மணக்கிருனென வைத்துக்கொள்வோம். இந்துலாவின் விதிப்படி இத்தகைய மணம் தடுக்கப்பட்டிருப்பினும் பிரஸ்தாப கலியாணம் செல்லத்தக்க தல்ல என்று கூறிவிட முடியுமா? இதில் தவறேதேனும் உண்டா? அதனால் கலியாணம் செய்து கொண்ட தம்பதிகளுக்காவது அவர்களுக்குப் பிறக்கும் பிள்ளைகளுக்காவது எவ்வித கெடுதலேனும் உண்டா? இவ்வித நிலையில் பிரிட்டிஷ் நீதி மன்றங்கள் இத்தகைய கலியாணம் செல்லத்தக்க தல்லவென்று கூறவேண்டுவதேன்? இக்கலியாணம் செய்து கொண்ட தம்பதிகளுக்குச் சட்டப்படிக்கும் சமூக முறைப்படிக்கும் தீங்குகளை உண்டாக்கக்கூடிய விதிகளை சட்டசபைகள் ஏன் விதிக்கவேண்டும்? இந்து மக்களிடையே சமூகச் சீர்திருத்த இயக்கம் நன்கு பரவி முன்னேற்றமடைய வேண்டுமாயின் கொடுமையான வைதீகக் கொள்கையிலும் நம் நாட்டுக்கு உரியனவல்லாத பழக்க வழக்கங்களிலும் மூழ்கிக் கிடப்பதினின்றும் இந்து சமூகம் விடுதலை பெற்று வெளியேறவேண்டுமாயின் ஏதாவது ஓர் வழி கண்டுபிடிக்கப் பெறவேண்டுவது அவசியமாகும். இதுபற்றிப் பலரும் நன்கு சிந்தித்து ஆலோசிக்க வேண்டுகின்றேன்.

## சில சீர்திருத்தங்கள்.

இதற்கிடையில் அவசரமாகச் செய்யப்படவேண்டிய சிற்சில சீர்திருத்தங்களை மட்டும் கூறுகின்றேன். அவை வருமாறு:—

(க) இளமை மணம் ஒழிக்கப்படவேண்டுமாயின்—இந்துசமூகம் மற்ற சமூகங்களைப் போல் முன்னேற்றமடைய வேண்டுமாயின் சிறுவர் சிறுமியரின் கலியாண வயதைக் குறிப்பிட்டு ஓர் சட்டம் இயற்றப்பட வேண்டும்.

(உ) விதவைகளின் மறுமணம் சம்பந்தமாக இருந்துவரும் தடைகள் அனைத்தும் அகற்றப்பட வேண்டும். பால்ய விதவைகளின் மறுமண விஷயத்தில் போதிய அளவு ஆதரவு காட்டப்படவேண்டும்.

(ங) சிற்சில சந்தர்ப்பங்களை முன்னிட்டு விவாக ரத்துச்செய்து கொள்ளலாமென்ற சட்டம் இருக்க வேண்டும். அவசியமாயின் இதுபற்றிக் கடினமான நிபந்தனைகளை ஏற்படுத்துங்கள். எனினும் சிற்சில சந்தர்ப்பங்களில் விவாக ரத்துச்செய்து கொள்ளலாம் என்ற சட்டம் இருக்க வேண்டுவது பெரிதும் அவசியமாகும்.

ஒன்று இரண்டு அம்சங்களைப்போல் இம்மூன்றுவது அம்சத்தை நான் அவ்வளவு முக்கியமாகக் கருதவில்லை. தற்பொழுது இருந்துவரும் வழக்கத்தாலும் சட்டத்தாலும் பல இன்னல்களும் துன்பங்களும் நேருகின்றனவென்பதை நான் நன்கறிவேன். எனினும் அவை ஒன்று இரண்டு அம்சங்களைப்போல் தேசிய முற்போக்கை அவ்வளவாகப் பாதிக்கவில்லை.

(ச) பெண் கல்வி இயக்கம் பரவப் பாடுபட வேண்டும். அரசாங்கத்தார் இவ்விஷயத்தில் அதிகப் பொருள் செலவிடும்படி செய்ய வேண்டும். பொதுஜனங்களும் இவ்விஷயத்தில் அதிக முயற்சி செய்ய வேண்டும். சிறுவர்களுக்கு உயர்தரக்கல்வி வழங்கச் செய்யப்படும் முயற்சிகளை, பெண்களுக்குத் தக்க முறையில் கல்வி வழங்க உபயோகிக்க வேண்டும். கல்வி கற்ற குடும்பத்தாரனைவரும் தாங்கள் சேமித்து வைப்பதில் ஒரு பகுதியை பிரஸ்தாப விஷயத்திற்குக் கொடுக்க வேண்டுவதவசிய மென்பதை உணர வேண்டும். கல்விக்காக ஒதுக்கப்பட்டிருக்கும் பணத்தில் ஒரு பகுதியினைப் பெண்களின் உயர்தரக் கல்விக்குச் செலவிட வேண்டுவது மிக மிக அவசியமாகும்.

---

# கொழும்பு.

சிலோன் நாட்டுக்கோட்டைச் செட்டியார் அசோசியேஷன் :—கொழும்பு நகரத்தார் பிரபவ ஆண்டு கார்த்திகைத் திங்கள் ௩-ம் நாள் ஞாயிறன்று ஸ்ரீ முத்துவிநாயகர் கோவில் வசந்தமண்டபத்தில் ஒரு பொதுக் கூட்டம் கூடினர்கள். இலங்கையில் வசித்து வரும் நாட்டுக்கோட்டைச் செட்டியார்களின் நலவுரிமைகளைப் பாதுகாப்பதற்காகவும், வேண்டிய நலன்களைச் செய்வதற்காகவும் "சிலோன் நாட்டுக்கோட்டைச் செட்டியார் அசோசியேஷன்" என்ற பெயரால் ஒரு சங்கம் ஸ்தாபிதம் செய்து பலர் அங்கத்தினர்களானர்கள். ஸ்ரீமான் ராம. அரு. அரு. ராம. வள்ளியப்ப செட்டியாரவர்கள் தலைமையில் சங்கத்தின் கூட்டம் நடைபெற்றது. அடியிற்கண்டவர்களை நிர்வாக சபை அங்கத்தினராகத் தேர்ந்தெடுக்கப் பெற்றது. திருவாளர்களான சா. ராம. மு, ராம. ராம. வள்ளியப்ப செட்டியார் (தலைவர்) ராம. அரு. அரு. ராம. வள்ளியப்ப செட்டியார் (உபதலைவர்) சி. கரு. சி. சித. முத்தையா செட்டியார் (பொக்கிஷதார்) செ. சி. நாக. நா. சந்தசாமி செட்டியார், சா. ராம. ப. சுப்பிரமணியஞ் செட்டியார் (காரியதரிசிகள்) வயி. சுப. லெ. வடுகநாதன் செட்டியார், கு. பழ. சு. பழ. சுப்பிரமணியஞ் செட்டியார், ந. ராம. ந. ஆண்டப்ப செட்டியார், சி. கரு. ஆ. அரு. ராமசாமி செட்டியார், பழ. சுப. லெ. கருப்பய்யா செட்டியார், ராம. சா. வடுகநாதன் செட்டியார், அ. மு. மு. பழனியப்ப செட்டியார், ஆத. கு. பழ. மு. லெட்சுமணஞ் செட்டியார், பெரி. சுப. நா. சண. நாராயணன் செட்டியார், கா. சுப. சு. அருணசலஞ் செட்டியார்.

நிறைவேறிய தீர்மானங்கள் :— க. இலங்கையிலுள்ள நம்மவர்களின் ஒவ்வொரு கடையும் மாதம் ஒரு ரூபா வீதம் சந்தா செலுத்தி, இச்சங்கத்தில் அங்கத்தினர்களாகச் சேர்ந்துகொள்ள வேண்டும். உ. இங்கு வட்டித் தொழில் சட்டத்தை (மணிலெண்டிங் ஆடினன்ஸ்) திருத்தி அமைக்க வேண்டுமென்று ஏற்படுத்தப்பெற்றிருக்கும் கழகத்தாரிடம் யாதாஸ்து கொடுத்து மேல் ஆகவேண்டியவைகளைச் செய்யும்படி நிர்வாக சபையாருக்கு அநுமதி கொடுக்கப் பெற்றிருக்கிறது. வந்தனோபசாரத்துடன் கூட்டம் இனிது நிறைவெய்தியது.

---

அறிந்தும் கவர்ந்த பொருளைப் பிறர் அறியாதவாறு காக்கக்கருதியும், உள்ளத்தின்கண்ணே ஒளித்து வைத்தான். அவ்வாறு மறைத்து வைத்த இடத்தை அறியாது மெல்ல மெல்ல ஒளியின்றிச் செல்வான்போலவும், வழியின்றிச் செல்வான் போலவும் அவ்வாளி ஆராய்ந்து சென்றது என்னும் கருத்தால் தடவியதோ என்று கவிநாயகர் அமைத்த அழகு அறியுந்தோறும் அளவிலா இன்பம் அளிப்பதாகும். தவம் முயன்று அரிதிற் பெற்ற தன்னுயிரையும் ஒளிக்க மனமில்லாத மன்னவன், மங்கையின் உருவத்தை மறைத்துவைத்தான் என்றால், அத் திருமகளை உயிரினும் அருமையாய் அவன் காதலித்துப் போற்றினன் என்பது சொல்லாமலே அமையுமன்றே? இவ்வாறு அம்பினை ஏவி அயலானது அகச்சிறையினின்றும் சீதையை மீட்டிய மன்னவன், அனுமனை ஏவி அம் மங்கையை அசோகவனச் சிறையினின்றும் மீட்டினன். இவ்வாறு இருவகைச் சிறையினின்றும் நீங்கிய நங்கை பின் தன் நாயகனை பெருந்தகையைப் பிரியாத பெருவாழ்வெய்தினள்.

---



# மிதமாய் விட்டால் மிஞ்சிப் போகும்.

இரங்கூனிலிருந்து திரு. மு. சாத்தப்ப செட்டியார் எழுதுவது :—

அன்பர்களே! சகநாதியிற் கூடிய ஐந்தாவது ஆண்டு மூன்றாவது கூட்டத்தில் சிவநேசச் செல்வர்கள் பலர் சைவ சமயம், சிவத்தொண்டு முதலிய நல் விடயங்களைப்பற்றிச் சொற்பொழிவுகள் நிகழ்த்தியிருக்கிறார்கள். ஆனால், நம் சைவ சமயத்தையும், சிவத்தொண்டையும் தட்டி எழுப்ப வந்ததாகத் தம்மை பறை சாற்றும் நமது திருவாளர் ராம. கு. ராம. இராமசாமிச் செட்டியாரவர்கள் எது குறித்துப் பேசினர்களென்று நினைக்கின்றீர்கள்? அரசியல், நாடு, மொழி, கதர், சுகாதாரம், தேகப்பயிற்சி, இளைஞர் முன்னேற்றம் முதலிய நல் விடயங்களைப் பற்றியல்ல. வேறு எது குறித்துப் பேசினர்கள்? அதைச் சொல்லவும் எம் நா படபடுக்கிறது; நெஞ்சம் துடிக்கிறது; கண்ணீர் ததும்புகிறது. உலகம் போற்றும் உண்மையாளரை, தியாக மூர்த்தியை, இந்திய முடிசூடா மன்னரை, கதர் வேந்தரை, கருணாவானைப் போல் எங்கும் ஒளிவீசும் காந்தியடிகளை இவர் தம் அழுக்கு நிரம்பிய உள்ளத்தால் சிறிதும் சிந்தியாது, நெஞ்சஞ்சாமல், நேர்மையற்ற வழியில் உளறிக் கொட்டியிருக்கின்றார். என்னே இவரின் போக்கு! "குளிக்கப் போய்ச் சேற்றைப் பூசிக்கொண்டது போல்" சிவநேசர் திருக்கூட்டத்தில் பிரசாரம் செய்யப்போய் உலகிற் பெரிய தலைவர் மீது பழிசுமத்தத் தொடங்கிவிட்டார். சிவநேசர் திருக்கூட்டத்தார் அகரவரிசைப்படி நம் தனவணிக நாட்டிற் பிரசாரம் செய்துவருகின்றனர். அதன்படி சகநாதிக்குச் சென்றிருக்கின்றனர். ஆங்கு நம்மவர் எண்ணத்தக்க சிறந்த வருகின்றனர். இந்நிலையில் அங்கு செவ்வனே கூட்டம் நிகழ்ந்ததா? அக்கூட்டத்தில் சிலர் அடிகளைப்பற்றிப் பேசினரா? அல்லது பேசியதாகப் பாவனைசெய்து தம் பத்திரிகையில் வெளியிட்டிருக்கிறாரா? என்று நமக்குப் பெரும் ஐயம் நிகழ்கிறது.

"அடிகளெனப்படுவோர் உலகத்திற் கலகம் விளைக்கலாமா" என்றும் இன்னும் பலவிதமாகவும் கூறுகிறார். அடிகள் இன்ன ஊரில் கலகம் விளைவித்திருக்கிறார்கள் என்று இவர் திட்டமாகக் கூற முன் வருவாரா? அடிகளின் அடிச்சுவட்டைப் பின்பற்றிய அன்பர்களுக்கும் கலகம் என்ற ஞாபகம் கூடச் சிறிதளவும் ஏற்படாதென இவர்க்கு நாம் அறிவுறுத்துகிறோம். அன்றியும் ஓர் பெருங் குழப்பமும், கலகமும், அடங்கிய கூட்டத்தில் 'சமாதானமடையுங்கள்' என்று அடிகள் தம் திருக்கரத்தை உயர்த்துவாராயின், அக்கூட்டம் மிகுந்த சாந்தத்தன்மை அடைந்துவிடுமென்று இவ் அவசரபுத்திக்காரர் அறியார் போலும்.

அடிகளார் நம் இந்தியாவுக்குச் செய்துள்ள பேருபகாரங்களைச் சிறியேன் இவர்க்கு முழுவதும் கூற விரும்பவில்லை. எனினும், ஒரு சிலவே கூறுகிறேன். உலக சிரேஷ்டர் தூக்கத்திலாழ்ந்திருந்த இந்தியாவிற்கு விழிப்புண்டாக்கி இருக்கின்றார். பால்யர், இளைஞர், முதியோர், வலியோர், வறியோர், நல் உளம் படைத்தோர், இவர் போன்ற பொறாமையுடையோர், எதிர்க் கட்சியோர், இன்னும் எண்ணற்ற பலர் உள்ளத்திலும், நமது நாடு, மொழி, கல்வி, சுதந்திரம், ராஜீயம், தேசியம் முதலானவைகளைப் பற்றிய நல்லெண்ணம் உற்சாகத்துடன் கொழுந்துவிட்டு வளருமாறு அருளி யிருக்கின்றதோடு இனனொரு செயற்கரும் செயலான, இத்தனை ஆண்டுகளாக மறைபட்டுக் கிடந்த நமது பண்டைய "கைத்தறி" "ராட்டினம்" இவைகளுக்கும் உயிர்கொடுத்து வளர்பிறைச் சந்திரன்போல் உலகெங்கும் கதர் அபிவிருத்தி செய்திருக்கிறார்கள். பிறப்பினால் தாழ்ந்தோரென்று இக்காலத்தில் எண்ணப்படும் மக்களை அவ்விதம் எண்ணுவது மனித நீர்மைக்கு ஏற்றதல்லவென்று மக்கட்கு உபதேசம் செய்து அக்குலத்திற் பிறந்த குழந்தையொன்றைத் தம் கூட வைத்து வளர்த்து வருகிறார். அடிகள் செய்த நற்றொண்டுகளை இன்னும் நாம் இவர்க்கு எடுத்தோத விருப்பமில்லை. ஆகலின் இமட்டோடு விடுக்கின்றோம்.

விதவா விவாகத்தால் வரும் நன்மை தீமைகளையும், தற்கால கோவில்கள் சிலவற்றில் டிரஸ்டிகள், குருக்கள் இன்னும் பல சிப்பந்திகளால் நடக்கும் கூடா ஒழுக்கங்களையும், பொதுமக்கட்கு அடிகள் எளிதில் எடுத்துரைத்து நல்லவை செய்யுமாறு வேண்டுகின்றார்கள். அம் மாண்பு பொருந்திய உரைகளை இவர்க்கு எடுத்துரைப்போமாயின் அவைகள் இவர் செவிக்கேறாதென நமதன்பர்க்கு நன்கு தெரியும்.

இந் நாள்வரை அடிகளின் அபிப்பிராயத்திற்கு மாறுபட்டுச் சில பத்திரிகைகளும், சில தலைவர்களும், இன்னும் சிலரும் தத்தம் அபிப்பிராயங்களை வெளியிட நாம் பார்த்திருக்கின்றோம். அவர்களுள் ஒருவராவது மகாத்மாவை வாய் கூசாது திட்ட முன் வரவில்லை. அந்தப் பெருமை நமது இராமசாமிச் செட்டியாரவர்கட்குக் கிடைத்திருப்பது குறித்து அவரைச் சார்ந்தார் சந்தோஷமடைந்தாலும் நாம் எள்ளி நகைப்பட வேண்டியதாகவே இருக்கிறது.

அடிகள் மீது எத்திறத்தாருக்கும் வெறுப்பு இருப்பதாக நாம் இதுவரையிலும் அறிந்ததில்லை. அடிகள் விரும்பாமலிருப்பினும், சுதேச மன்னர்கள், பெருந் தலைவர்கள் முதல் சாதாரண மக்கள் வரையிலும், ஒவ்வோர் நகரத்தினரும், கிராமத்தினரும், அன்னிய நாட்டினரும் அவரை வருந்தி அழைக்கிறார்கள். உலகத்தில் கலகம் விளைவிப்பவராகிய காந்தியடிகளை ஏன் மூன்று இந்திய ராஜப் பிரதிநிதிகளும் அழைத்துக் கலந்து பேசுகிறார்கள்? இவ்வுலகிற்கு நற்கதி யளிக்க வந்த நம் இராமசாமிச் செட்டியாரவர்களிருப்பது மேற் கண்டவர்களுக்குத் தெரியவில்லைபோலும்! தெரிந்திருப்பின இவரை அழைத்துப் பேசியிருப்பார்கள். இனி இவர் தாம் இருப்பதாக விளம்பரம் செய்து கொண்டால் நலமென எண்ணுகிறோம்.

நமது சிவநேசன் நன்னோக்குடன், சமயம், மொழி, நாடு தேசீயம், பெரியோரைப் பேணல் முதலிய வளங்களிலே வளர்ந்து, நம் இளைஞர்களுக்கு நல்லறிவையும், உற்சாகத்தையும் ஊட்டுவான் என சிவநேசர் திருக்கூட்டத்தாரும் இன்னும ஏனைய பலரும் மகிழ்ந்திருந்தார்கள். அதற்கு முற்றிலும் மாறாகப் பத்திரிகை ஆரம்பித்த இரண்டொரு திங்கள்களிலேயே தூஷணைகளில் ஈடுபட்டு விட்டது. இந்நிலையில் கானாடுகாத்தான்கோவிலில், அடுத்துள்ளவர்களை யறியாதவரும், உலகமே இன்ன நிலையிலிருக்கிறதென்பதையறியாதவரும், சபிண்டி, திவசம், முதலிய சிரார்த்தங்களில், ஏகோதிஷ்டம், எள்ளு, எண்ணை, இருப்புச்சட்டி முதலிய தானங்களுக்குத் தாளம் போட்டு ஏங்கித்திரிகிற பார்ப்பன வகுப்பைச் சேர்ந்தவருமான சிவ சம்புநாத அய்யரெனும் ஒருவர் தம் பெயர் உலகில் அடிபட வேண்டுமெனப் பெரும் பித்தம் கொண்டு 'காந்தியை மகாத்மா என்றல் தகுமோ' என்று பீடிகை போட்டு வாயடங்காமல் சிவநேசனில் உளறிக்கொட்டியிருக்கின்றார். இவ்வசட்டுக் கட்டுரையைச் சிவநேசன் தாங்கி வந்தது குறித்து நம மனம் மிகவும் வருந்துகிறது. சிவநேசன் என்ன செய்வான்? இராமசாமிச் செட்டியாரவர்களின் திருச்செயலன்றோ இது?

இப்பத்திரிகை போன்ற ஒரு சில பத்திரிகைகள் தவிர உலகில் மற்ற யாவும் மகாத்மாவின் அடிச்சுவட்டைப்பின் பற்றிய கடக்கின்றன. இவ்வாறாக நமது சிவநேசன் ஆசிரியர் அடிகளின்மீது பெரும்பழிசுமத்தத் தொடங்கி விட்டார். பண்டிதை அசலாம்பிகை அம்மையாரவர்கள் காந்தி புராணம் நூற்பயனிற் கூறியவாறு,

மேல் நாட்டார் எசு வென வியன் தருக்கர்
நபி யென்ன விளங்கும் இந்த
மாநாட்டார் கண்ண பிரான் மலர்ந்த [மொழிப்
படி மாலின் வரவே யென்று
சானுட்டப் பவுத்த ரெலாம் தம திறையாம்
புத்த னெனச் சாற்ற நிற்கும்
பூநாட்டும் திருவடியான் புகழ் நாட்டு
வார் பிறப்பும் புனித மாமே

என்ற வண்ணம் கடவுளின் அவதாரமாக இந் நில உலகில் அவதரித்திருக்கும் அடிகளை நம் மரபில முதன் முதலாக இவர் பழி சுமத்த வந்தது குறித்துச் சிறப்பாக நமது சிவநேச அன்பர்களே பெரிதும் வருந்துவார்களென்று நாம் கூற வேண்டுவதில்லை.

ஆகையால், உண்மையான சைவசித்தாந்தமும், சிவத் தொண்டும், இன்னும் பல நம் சைவ மேம்பாடுகளும், நாடு, மொழி, கல்வி, சுயமதிப்பு, இளைஞர் முன்னேற்றம் முதலியன நம் நாட்டில் ஓங்க வேண்டு மென்ற நன்னோக்குடன் சிவநேசர் திருக்கூட்டத்தார் இச் சிவநேசன் பத்திரிகையை ஆரம்பித்திருப்பின், அந் நற்றொண்டுக்கென இப் பத்திரிகைக்கு வேறு ஆசிரியரை நியமித்துச்செவ்வனே நேர்மையான முறையில் சிவநேசனை நடத்தும்படி இத்திருக்கூட்டத்தாரைப் பன்முறையும் வணக்கத்துடன் கேட்டுக்கொள்கிறேன்.

அன்பர்களே! இன்னமும் இவர் மனம் போனவாறு மகாத்மாவைத் தூஷணைசெய்யும்படி மிதமாய்விட்டால் மிஞ்சிப் போகும். ஆதலால் அடிகளின உண்மையைக் கைக் கொண்ட ஒவ்வொரு வரும இவர்க்குத் தக்கவாறு அறிவுறுத்த வேணுமாய்த் தாழ்மையுடன் கேட்டுக்கொள்கிறேன்.

---

# சிவ சம்பு நாதய்யரின் சீற்றம்.

திருவாளர் ஜெயராம அய்யர் எழுதுவது :—

சிவநேசன் முதலாவதாண்டு ஒன்பதாவது வாரபத்திரிகையின் முதற் பக்கத்தில் "காந்தியை மகாத்மா என்றல் தகுமோ?" என்ற மகுடத்தின் கீழ் கானாடுகாத்தான் கோவில் சிவசம்புநாதய்யரெனப்பெயர்கொண்ட ஒருவர், அறிவுக்கும் தமக்கும் தினையளவுகூடச்சம்பந்தமில்லாது பலபடப்பிதற்றியிருக்கின்றார். அறிவுள்ள மக்களெவரும் அதனைக்கண்கொண்டு நோக்கத்தகாதவாறு எழுதப்பட்டிருக்கிறது. அதனை முற்றும் ஆராயப்புகின் குப்பையைக் கிளறுதலேயே ஒக்கும். எனினும் எனது இனத்தவராகிய அன்பர் சிவ சம்பு நாதய்யருக்குச் சில அறிவுரைகள் கூறாதிருக்க முடியவில்லை.

இவர் கூற்றுக்களால் "நால்வர்களின் ஓர் ரோமத்திற்படிக்குள்ள சிறுதுகளத்தனையும் தெய்வ சக்தி வாய்க்கப்பெறாத கலகக் களஞ்சியமாயுள்ள காந்தியை மகாத்மா என்றுவது அடிகளென்றுவது கூறுதல் ஒரு சிறிதும் பொருந்தாது. ஆனல் மகாத்மா என்னும் பெயருக்கு எதிர்மறைப் பெயரிட்டழைத்தலே பொருத்தமுடையதாகும்" என்பதும்ஒன்றாகும்.

இவ்விடத்து இவ்வையர் புரோகிதராக இருத்தல் கூடுமோ என்ற ஐயம் எழுகின்றது அனல் பெயர்ப்பொருத்தம் பார்ப்பதில் அன்பர் தவறிவிட்டாரென்பதே எனது கருத்தாகும்.

ஆயினும் அவரது நிலைமைக்குப்பெரிதும் வருந்த வேண்டியதா யிருக்கின்றது. பாவம்! பாவம்!! பாவம்!!!

உலகத்தில் பலகண்டங்களிருக்கின்றன. ஓர் கண்டத்தில் பல தேசங்களிருக்கின்றன ஒரு தேசத்தில் பல மகாணங்களிருக்கின்றன. ஒரு மாகாணத்தில் பல ஜில்லாக்களிருக்கின்றன. ஒரு ஜில்லாவில் பல தாலுகாக்களிருக்கின்றன. ஒரு தாலுக்காவில் பல கிராமங்களிருக்கின்றன. அவற்றுள் ஓர்குக்கிராமத்தின் ஓர் மூலையில் இரண்டாம் பேரறியாமல் வதியும் நமது அன்பர் உலகமனைத்தும் ஒருங்கு சேர்ந்து அழைக்கும் மகாத்மா என்னும்சொல்லைத் தகாதென்று பெயர்ப் பொருத்தம் பார்த்துச் சொல்ல முன் வந்தமைக்குப் பெரிதும் வருந்துகின்றேன்.

மகாத்மாவின் பேரறிவில் எள்ளத்தனையும் வாய்க்கப் பெறாத இவர் மகாத்மாவிடம்பொறாமைகொண்டமைக்குக் காரணம் விளங்கவில்லை.

இவர் கூற்றுக்கள், ஈவு, இரக்கம், அறிவு சிறிதேனும் கொண்ட மக்களெவரும் ஒப்புக்கொள்ளத்தக்க தன்றாகிலும் தமக்கு வேண்டிய முறையில் திரித்துக் கூறப்பட்டிருக்கின்றமையாலும் அவைகளை இங்கே கிளறுது விடுக்கின்றேன்.

விபூதி ருத்திராக்கம் பூண்டு சிவவேடதாரிகளாய்ப் பிறரை ஏமாற்றித் திரியும் போலிச் சிவ பக்தர்கள் எங்ஙனம் மகாத்மாவின் உண்மைத் தெய்வ பக்தியை உணரமுடியும்? உள்ளன்புடன் நோக்குவார்க்கே உண்மை விளங்கும்.

தமது போலி வேடம் வெளிப்பட்டு விடுமோவென்று அஞ்சி ஏனைய உண்மைப் பக்தர்களையும் அறிவாளிகளையும் குறைகூறி நாஸ்திகரென்றும் அறிவிலிகளென்றும் தூற்றுவதனால் உண்மை ஒருபோதும் மறைந்துவிடமாட்டாது.

புராணத்திலெழுதி வைக்கப்பட்ட ௮000 சமணரைக் கழுவேற்றின ஞான சம்பந்தரது சரித்திரத்தை தமது வேதமாகக் கருதும் இவர் உலகெலாம் போற்றும் உத்தமசிலர் மகாத்மா காந்தியடிகளின் தற்சரிதத்தைக் கோணுத உள்ளத்துடன் உற்று நோக்குவாராயின் தம்மாற் கூறப்பட்ட பெயர்ப் பொருத்தம் தவறென்பதை ஒருவாறு உணர்தல்கூடும்.

பிறநாட்டு உடை தரிப்பதினாலேயே நம் நாட்டு மக்கள் பலர் வறுமையினால் வருந்த நேரிடுகின்றது என்று காந்தி கூறுதல் தவறு என்பதும் இவர்கூற்று.

இவருக்குச் சிறிதளவேனும் உலக ஞானம் உண்டா என்றுகேட்கவிரும்புகின்றேன்.

நாடு நன்னிலையடைய வேண்டுமாயின் கைத்தொழில் ஆதரிக்கப்பட வேண்டுமன்றோ?

சீமைத்துணியைக் கட்டிக்கொண்டு சிவ சிவா என்று சொல்வதால் மட்டும் நம் நாடு முன்னேற்ற மடைந்துவிட முடியுமா?

சிவ சம்பு நாதய்யர் எனப் பெயர் வைத்துக் கொண்டு உலகப் பெரியார்களையும் அறிவாளிகளையும் இகழ்வது சமயத்திற்கும் சிவசம்பு நாதய்யர் என்ற திருநாமத்திற்கும் அபகீர்த்தி சூழ்வதாக இருக்கின்றமையால் இவரது பெயர் இவருக்குப் பொருத்தமன்றென்பதை அன்பருக்கு அறிவுறுத்துகிறேன்.

"சிவநேசன்" உதவி ஆசிரியாக இருந்துவந்த திரிசிரபுரம் தமிழ்ப் புலவர் திருவாளர் அ. மு சரவண முதலியாரவர்கள் நமக்குப் பின்வருமாறு எழுதுகிறார்கள்:—

அன்புள்ள ஐயா!

தாங்கள் என்மீது அன்புகூர்ந்து கீழ் வரைந்திருக்குஞ் செய்திகளைத் தங்கள் 'குமரன்' வாயிலாக வெளிப்படுத்த வேண்டுகிறேன்.

யான் 'சிவநேசன்' என்னும் வாரத்தாளுக்கு உதவியாசிரியனாகவந்தமர்ந்ததை அதன் வாயிலாகப் பல அன்பர்கள் அறிந்திருக்கலாம். உ௬-௧௧-உ௭-ல் யான் அவ் வேலையினின்றும் விலகிக் கொண்டேன். காரணம் என் மனச்சான்றைப் பணத்துக்கு விற்க முடியாததே. அதன் விளக்கம் வருமாறு:—

யான் இங்கு வந்த பின் 'சமய குரவர்' என்னுந் தலைப்பிட்டு இரண்டு பத்திரிகைகளில் தொடர்ச்சியாக எழுதி, நானே வாரத்துக்கு வெளிவரும் பத்திரிகைக்கும் எழுதினேன். அங்ஙனம் யான் அதனைத் தொடர்ந்து எழுதியதற்குக் காரணம் என்னையெனின், முதற் பகுதியைக் கண்ணுற்ற, திருச்சி பிஷப்ஹீபர் கல்லூரித் தலைமைத் தமிழ் ஆசிரியரும், எவற்றையும் ஆராய்ந்து உண்மை காணும் பேரறிஞரும், ஒழுக்கத்திற் சிறந்தாரும், என் இன்னுயிர்ப் பெரியாருமாகிய திருவாளர் ந. மு. வேங்கடசாமி நாட்டாரவர்கள் எனக்கு வரைந்த கடிதத்தில், 'தங்கள் கட்டுரையைப் படித்து மிக்க மகிழ்ச்சியுற்றேன். அதனைத் தொடர்ந்தெழுதிப் புத்தகமாக்கவேண்டும்' என எழுதியிருந்தார்களென்பதேயாகும்.

மூன்றுவது பகுதியாக எழுதியது கீழ் வரைந்திருப்பது:—

"என்நூலாசிரியர் தலையினும் அவர் இறைவன் திருவருள் பெற்ற பெரியார் என்னுஞ் சுமையை ஏற்றி நாம் இடர்ப்பட வேண்டுவதில்லை. அங்ஙனம் திருவருள் பெற்ற பெரியாருக்கும் உடம்பும் அதுகொண்ட வினைப்பயன்களும் நின்றமையின், வேதனைபற்றி ஓம்பா வழித் துறக்கப்பட்ட புலன்கண்மேற் பழைய பயிற்சி வயத்தான் நினைவு செல்லுமன்றே? அந்நினைவு முனைப்புடன் எழுங்கால் ஆண்டவன் அருள் மறையும்; மறையின முக்குண வயப்பட்டு முறை மறந்தறைவர். அம்முனைப்புடன் கூடிய நினைவற்ற பெரியாரும் தாந்தோன்றிய காலத்திலுள்ள மக்களின் அறிவு இயக்கங்களுக் கேற்ப அவர்க்கு அந்நாளில் ஆவன அறிவுறுத்திச் சென்றிருப்பர். காலதேச நிகழ்ச்சிகளால் மாறுபடும் இயல்புடைய மக்கட்கு அப்போதனை முற்றும் இன்றியமையாதெனக் கொள்ளுதலும் சாலாது. உதாரணமாக, ஒரு பெரியார் குளிர் காலத்தில் போர்வையால் உடலைப் போர்த்தாது வருந்தும் மக்களைநோக்கி 'நீவிர் இங்ஙன மிருப்பின் நுமது உடல் நலங் குறையும்; கம்பலப் போர்வையாற் போர்த்து உடலுக்கு ஊறு நேராமற் பேணுங்கள்' எனக் கூறிச் சென்றாராயின், வேனிற் காலத்தும் அப்போர்வையாற் போர்த்துக் கொள்வாருளரோ? அங்ஙனம் போர்க்காராயின் அவர் அப்பெரியார் போதனையைக் கை விட்டவராவரோ? ஆகார். இங்ஙனமே தேசம் நிகழ்ச்சியாகிய இவைகளால் மாறுபடுவனவும் உளவென் றுய்த்துணர்க. இன்னும் இவ்வுண்மை, ஒவ்வொரு சமயப்பெரியார் தோன்றிய காலத்தினையும், அக்காலத்து மக்கள் நிலையினையும், அந்நிலைக் கேற்றவாறு அவர் அறிவுறுத்திய பொன்னுரைகளையும் நுனித்துநோக்குவார்க்கு நன்கு புலனாகும். இவ்வுண்மை பற்றியன்றே,

'உலகத்தோ டொட்ட வொழுகல் பல கற்றும் கல்லா ரறிவிலா தார்' என்னும் அருமைத் திருக்குறளின் சிறப்புரையில், அறநூல் சொல்லியவற்றுள்

## சிவநேசன் உதவியாசிரியர் விலகினர்.

### குமரனை மறுப்பதே சிவநேசன் கோள்கை.

### மனச்சான்றைப் பணத்திற்கு விற்கமுடியாது.

### பத்திராதிபருக்கு விளங்கவில்லை.

### பண்டிதமணி ஒப்புக்கொள்கிறார்.

இக்காலத்திற்கு ஏலாதன வொழித்து சொல்லாதனவற்றுள் ஏற்பனகொண்டு வருதலான் அவையுமடங்க உலகத்தோடொட்ட வென்றும்' எனப் பரிமேலழகர் வரைந்து சென்றனர். இன்னும் இதனை, "தொன்மையவாமெனு மெவையு நன்றாகா வின்று தோன்றிய நூலெனு மெவையுந் தீதாகா துணிந்த, நன்மையினார் நலங்கொண்மணி பொதியுமதன் களங்க நவையாகா தெனவுண்மை நயந்திடுவர் நடுவார், தன்மையினார் பழமை யழ காராய்ந்து தரிப்பர் தவறு நலம் பொருளின்கட் சார்வாராய்ந்தறிதல், இன்மையினார் பலர் புகழிலேத்துவரே திலருற்றிகழ்ந்தனரே விகந்திடுவர் தமக்கென வொன்றிலரே' என உமாபதி சிவமும் அருளிச் செய்துள்ளார். இவற்றால் தொன்மை அனைத்தும் நன்மை எனவும் புதுமை முற்றுந் தீமை எனவுங் கொள்ளுதற்கில்லை என நன்கு விளங்குகிறது.

இப் பொன்னுரைகளைத் தாமே போற்றி அறிந்துகொள்ள மாட்டாத மக்கள் சிலர் அவற்றை அறிந்தார் கூறும் அறிவுரைகளையும் கேளாதவராய் 'எவவுஞ் செய்கலான்றான் றேறானவ்வுயிர் போமளவுமோர் நோய்' என்ற தேவர் திருவாக்குக்கு முழு இலக்கியமாய் 'முன்னோர் வழக்கம்' என்ற இரண்டு சொற்களாலாகிய ஒரு தொடரளவில் நின்று கொள்கின்றனர். என்னே இவர் அறியாமை! அங்ஙனம் அவ் வழக்கத்திற்கு அடிமைப்படும் இவர் அமமுன்னோரைப் போலக் காலால் நடந்து வழிச்செல்லாது காற்றினும் விரைந்து செல்லும் இயந்திர வூர்தியினை வேண்டுவது என்னை? அவர் போல் இருவேளை உணவு கொள்ளாது நமது மூதாட்டி 'நான்கு போதுண்பான் உடல் விட்டுப் போகியே' என நான்கு வேளைக்குத் தான் இலக்கணங் கூறினர்; நாம் அவ் வெல்லையைக் கடந்து விட்டாற் கேடில்லை எனக் கருதினவர்போல ஆறுபொழுது உணவு கொள்வதுடன், காலையில் படுக்கையினின்று எழும்போதே பல்லுந்துலக்காமல் நாப்புலனுக்கு அடியராய் நாகரிகக் குடியராய் இருப்பதன் நோக்கம் யாதோ? அறியேம்.

இனி, சமய வொழுக்க மென்பதைப் பொதுவெனவும் சிறப்பெனவும் இருவகையாகப் பிரிக்கலாம். நடுவு நிலைமை, அடக்கமுடைமை, பிறனில் விழையாமை, பொறையுடைமை, அழுக்காறாமை, வெஃகாமை, புறங்கூறாமை, பயனில் கூறாமை என்று இன்னோரன்ன பலவும் பொதுவொழுக்கத்தின் பாற்படும். என்னை? இவை யனைத்தும் எல்லாச் சமயத்தாராலும் போற்றப்படுதலான் சிறப்பொழுக்க மென்பது நற்குணந்திரண்ட ஞானகுரவனை அடுத்து, சமய முதலிய தீக்கைகளைப் பெற்று சரியை முதலிய வழிபாட்டில் நிற்பதாகும். இது சைவ சமயம் ஒன்றிற்கே உரியதாகலின் சிறப்பொழுக்கமாயிற்று. இங்ஙனமே ஒவ்வொரு மதத்தார்க்குஞ் சிறப்பாகவுள்ளன சிலஉள. அச்சிறப்பொழுக்கமும் அகவொழுக்கம், புறவொழுக்கமென இருபிரிவினவுடையது."

இதனைப்பார்த்த பத்திராதிபர், திரு இராமசாமிச்செட்டியாரவர்கள், "சமய குரவர்கள்" பெருமைகளை விளக்கவும், பாழுங் கொள்கைகளைக் கையாளாது ஒதுக்கவுமே வேண்டும். இது முற்றுமே அகற்றி குரவர் சிறப்பு எழுதுக" என எழுதினர். யான் நேரிற்போய்ப் "பாழுங் கொள்கை" எதுவெனக் கேட்டேன். அவர் அதனை உ, ங, முறை படித்துப்பார்த்துவிட்டு "இவற்றால் தொன்மை அனைத்தும் நன்மை எனவும், புதுமை முற்றும் தீமை எனவுங் கொள்ளுதற்கில்லை என நன்கு விளங்குகிறது" என்னும் பகுதியைக் குறித்தனர். யான் அது என் கருத்தன்று, நமது சந்தான குரவருள் ஒருவராகிய உமாபதி சிவமும், உரையாசிரியரிற் சிறந்தாராகிய பரிமேலழகரும் ஆகிய இவர்கள் கருத்து என "தொன்மையவாமெனுமெவையு நன்றாகா..................." என்ற செய்யுளையும், "அறநூல் சொல்லிய வற்றுள்..................." என்ற உரையையும் எடுத்துக் காட்டினேன். அதற்குமுன் பொருள் விளங்காத அவைகளுக்கு யான் பொருள் கூறிய பின்னர் வேறு ஒன்றுஞ் சொல்லுதற்கு வழியில்லாதவராய், "இது அவர்களுக்குச் சாதகமாக இருக்கிறதே" என்றார். யாருக்கு என்றேன். "குமரனுக்கும் ஊழியனுக்கும்" என்றார். நம்மாற் போற்றப்படும் ஆசிரியர்கள் கருத்து அங்ஙனமிருந்தால் யான் என் செய்வேன் என்றேன். "எப்படியிருந்தாலும் அவர் கொள்கைகளனைத்தையும் மறுக்க வேண்டுமென்றார். அவற்றில் ஒழுங்கானவை இருப்பின் இரண்டும் ஒத்துத்தானே வரும் என்றேன். "அவற்றை நாம் ஒத்துக்கொள்ளக் கூடாது" என்றனர். இதனைக் கேட்டவுடன் சிறிது ஊன்றி எண்ணினேன். எனக்கு ஒரு அச்சம் உண்டாயிற்று. ஏனெனில், இவ்வுண்மை அந்தக் கூட்டத்தாருக்கு (குமரன்)த் தெரிந்து, "சிவநேசன" உதவியாசிரியராகிய, அ. மு. சரவண முதலியார் தாயார் சிறந்த கற்பரசி" என்று எழுதினால் நாமென் செய்வது, பத்திராதிபர் கருத்துப்படி அதை நாம் ஒப்புக்கொள்ளப் படாதே என எண்ணி உடனே "ஐயா! எனக்கு ஆராய்ச்சிசம்பந்தமாக எழுத வருமே யன்றி, பாட்டி கதை எழுத வாராது. எழுதின் அறிஞர் உலகம் மதிக்காது. ஆதலால் நானிங்கு இருக்கமுடியா"தெனக் கூறி எனக்குள்ள வினைக்கூலியை வாங்கிக் கொண்டு விலகிவிட்டேன்.

மற்றொன்று உண்டு. ஆனால் அது யான் விலகியதற்குக் காரணமாகாது. அதாவது:—யான் இங்கு வந்தவுடனே இங்கு வரும் கட்டுரைகளையும் தலையங்கத்தையும் பார்த்து 'காந்தியடிகள் உள்ளவாறே ஒரு பெரியார். அவரைப் போற்றும் உலகம் அறியாமையுடையதன்று; அவரைக் குறைத்தெழுதல் தகாது; அன்றி, பல பத்திரிகைகளும் பல அறிஞரும் தாக்குவதில் ஐயமில்லை' எனக் கூறினேன். அதனை அவர் பொருட்படுத்தவில்லை. பொருட்படுத்தின், "எவவுஞ் செய்கலான்றான் றேறானவ்வுயிர் போமளவு மோர் நோய்" என்னுந்தேவர் திருவாக்குக்கு இலக்கியமில்லாமற் போகும் உலகம் என்ற கருத்தோ என்னவோ. அறியேன். இதுபற்றி, இங்கு வருமாறு வற்புறுத்திய மகிபாலன்பட்டி திருவாளர், பண்டிதமணி மு. கதிரேச செட்டியாரவர்கட்குத் தெரிவித்திருந்தேன். இன்று மாலை அவர்களிடஞ் சென்று யான் எழுதிய நவது பகுதிக் கட்டுரையை இருமுறை படித்துக் காட்டினேன். அவர்கள் அதனை முற்றும் ஏற்றுக் கொண்டார்களே யன்றி மறுக்கவில்லை.

இன்னும் இவைகள் சம்பந்தமாக நடந்த பேச்சுகள் பல. தங்கள் பத்திரிகையை வீணுக்க விரும்பாமல் இத்துடன் நிறுத்துகிறேன்.

---

## வித்தியாசாலைப் பண மேங்கே?

பணங் கொடுத்தவரி லொருவர் எழுதுவது:—

கண்டனூர் ஸ்ரீமான்களான தெ. அரு. சித. இராமநாதச் செட்டியார், மகாதேவாக் காசிச்செட்டியார் என்ற நா. கா. அரு. காசிவிஸ்வநாதன் செட்டியார் ஆகியவர்களும் இன்னும் சிலரும் முயற்சிசெய்து கண்டனூரில் ஒரு வித்தியாசாலையைக் கண்டனர். அதன் நிர்வாகப் பொறுப்பை மேற்கண்ட இருவருமே ஏற்று நடத்தி வந்தனர். வித்தியாசாலையில் நமது தனவணிக மாணவர்கள் பலர் படித்து வந்தனர். பிள்ளை ஒன்றுக்கு இருபத்து நான்கு ரூபாய் முதல் அறுபது ரூபாய்வரை வாங்கப்பட்டன. புத்தகங்களும், படங்களும், நாற்காலி, பீரோ, மேஜை, குர்ச்சி வகையாச்சாமான்களும் ஏராளமாக இருந்தன. சிறிது காலம் வித்தியாசாலை செவ்வனே நடைபெற்று வந்தது. பின்னர் யாதுகாரணம் கொண்டு நின்றதென்பது தெரியவில்லை. பிள்ளைகளிடம் வாங்கிய பணத்தில் மீத மிருக்கலாமென்று சொல்லப்படுகிறது. ஆனால் நிர்வாகஸ்தர்கள் இவை குறித்து எவ்வித அறிக்கையும் இன்னும் வெளியிடவில்லை. பணம் எங்கிருக்கிறதென்பதும், சாமான்கள் எங்கிருக்கின்றன என்பதும் மர்மமாகவே யிருக்கின்றன. இவ்வூர் மீனாக்ஷி சுந்தரேஸ்பராள் ரீடிங் ரூம், இளைஞர் சங்கம் முதலியவற்றில் மீத மிருந்த பணத்தை சிவன்கோவிலுக்கு விநியோகப்படுத்தியதுபோல் இப்பணத்தையும் சிவன் கோவிலுக்கு விநியோகப்படுத்தியதாகவும் தெரியவில்லை. நிர்வாகஸ்தர்கள் தங்கள் பொறுப்பை உணர்ந்து ஷை விஷயங்களைக் குறித்து ஓர் அறிக்கை வெளியிடுவதோடு மீதமிருக்கும் பணம், சாமான் ஆகியவற்றைச் சிவன்கோவிலுக்குச் சேர்ப்பிப்பார்களென்றும் நம்புகிறேன்.

---

## உண்மையில்லை.

கண்டனூர் இளைஞர் சங்கக் காரியதரிசி ஸ்ரீமான் நா. லெ. ராம. நாராயணன் செட்டியார் எழுதியது:—

இளைஞர் சங்கப் பணத்தை ஸ்ரீமான் ந. வீரப்ப செட்டியார் கையாடி இழுட்டு காந்தி நகருக்கு ஓடிவிட்டதாகவும், இன்னும் பல இழிவுரைகளும் பாரதமித்திரன், சிவநேசன் பத்திரிகைகளில் வெளிவந்திருக்கின்றன. இளைஞர் சங்கச்சாவி, இருப்பு ஆகியவற்றை என்னிடம் ஒப்புவித்துவிட்டே ஸ்ரீமான் வீரப்ப செட்டியார் காந்தி நகருக்குச் சென்றார். சங்கத்திலிருந்து ரூபாய் அறுபதுக்கு மேல் எழுபதுவரை ஸ்ரீமான் வீரப்ப செட்டியாருக்குக் கொடுக்க வேண்டியதிருக்கிறது. ஷை ரூபாயையும் இனமாக விட்டுவிட்டார். இளைஞர் சங்கம் நன்னிலையிலிருப்பதற்கு வேண்டிய முயற்சி செய்தார். சந்தா ஒழுங்காக வசூலாகாததாலும், ஆண்டு விழாச் செலவுக்குப் பணம் தருவதாக வாக்களித்தவர்களில் பலர் பணம் கொடுக்காமையாலும் அன்னார் அடைந்த சிரமங்கள் பலவாகும். விஷயம் இங்ஙனமிருக்க, பாரதமித்திரன், சிவநேசன் நிருபர்கள் உண்மைக்கு மாறான விஷயங்களை என்நோக்கங்கொண்டு எழுதினர்களென்பது விளங்கவில்லை. இத்தகைய பொய்மையான விஷயங்களை வெளியிடுவதால் ஸ்ரீமான் வீரப்ப செட்டியாருக்கு ஒரு குன்றவும் வந்துவிடாதென்பதை பாரதமித்திரன், சிவநேசன் நிருபர்கள் அறிய வேண்டும்.

# ஐயரின் காலட்சேபம்.

இரங்கூனிலிருந்து திரு. அற்புதானந்த சுவாமிகள் எழுதுவது :—

"காந்தியை மகாத்மா எனறல் தகுமா?" வென காளையார் கோயில் பிராமணர் ஒருவர் சிவநேசனில் வரைந்துள்ள கட்டுரை எமக்குப் பெரும் வியப்புண்டாக்கியது. இவ்வந்தணர் மகாத்மா வென்ற பதத்திற்கு அழகிய பொருள்களைக் கூறுகின்றார். சிவபிரான் திருவடிக்கண் அன்பு செலுத்தி அவர் அருளைப் பெற்றுள்ளவர்களே மகாத்மா ஆகுவர் என ஒரு ஆகாயக் கோட்டை நிர்மாணித்து, பல சரிதைக் குறிப்புக்களினால் அவ்வாகாயக் கோட்டைக்கு மேக அகழிகள்வெட்டி சில பெரியார்களின் தியாகங்களை ஒரு மூர்த்த வடிவாக்கி "மகாத்மா" வென ஒரு உருவஸ்தாபனம் செய்து அவ்வுருவத்திற்கு உரோமார்ச்சனை, உரோம தூளியார்ச்சனை செய்ய முறபட்டுள்ள முப்புரிநூலாளனது மூடக்கல்வித் திறமேதிறம்! இவர் பிரம்மஸ்ரீ பாரதியாரவர்கள் கூறியுள்ள,

வாழ்க நீ எம்மான்
இவ்வையத்துநாட்டிலெல்லாம்
தாழ்வுற்று வறுமை மிஞ்சி
விடுதலைதவறிக்கெட்டுப்
பாழ்பட்டு நின்றதாமோர்
பாரததேசந்தன்னை
வாழ்விக்கவந்த காந்தி மகாத்ம!
நீவாழ்க வாழ்க!!

என்ற கவியைச் செவிசாய்த்திரார் போலும்!

முன் கூறிய பெரியார்களையும் அவர்கள் சரிதையையும் தம் திருநாமம் அஷ்டோத்தரமாகக்கொண்டிருப்பவர் எட்டேகால் லட்சண பகுதிகளிலீடுபடுவதேன்? இவர் கூறும் சான்றுகளின் சமயம், தென் இந்தியமக்கள் நிலை, பொதுஜனசமூகநிலை, மதமார்க்க நிலை யாதென்பதை அறிவாரா? இவ்வயமதில் காந்தியடிகள், மகாத்மா காந்தியடிகளெனப் போற்றப்படும் இயல்புகளின் நிலையையும், அவ்வமயம் நிலையையும் அறிந்துணர்க்கூடாதோ? சமண இருள், கூன்பாண்டியனின் வெப்புநீத்தல், குடுவெவாதிருத்தல், நீற்றறையில் அடைபடுதல், கல்லைத் தோணியாக்குதல், கரியைப் பரியாக்குதல் என்பனபோன்றவைகளைக்கூறித் தன்னையும் சிவநேசர் திருக்கூட்டத் தொண்டனாகவோ, புரோகிதனாகவோ மூண்டனாகவோ ஏற்படுத்திக்கொள்ள முயலும் அந்தணருக்கு, "குருக்கள் துதி" என்ற ஸ்ரீ பாரதியாரவர்கள் பாடலில் ஒரு பாட்டைக் கூறி பொருளறியச் செப்பவேண்டியதாகவுள்ளது.

சென்றதினிமீளாது
மூடரே நீர்
எப்போதுஞ்சென்றதையே
சிந்தைசெய்து
கொன்றழிக்கும் கவலையெனுங்
குழியில் வீழ்ந்து
குமையாதீர் சென்றதனைக்
குறித்தல் வேண்டா
இன்று புதிதாய்ப் பிறந்தோம்
என்று நெஞ்சில்
எண்ணமதைத் திண்ணமுற
இசைத்துக்கொண்டு
தின்று விளையாடி
இன்புற்றிருந்து வாழ்வீர்
அஃதின்றிச் சென்றதையே
மீட்டும் மீட்டும்
மேன்மேலும் நினைந்தழுதல்
வேண்டா அந்தோ!
மேதையில்லா மானுடரே
மேலு மேலும்
மேன்மேலும் புதியகாற்று
எம்முன் வந்து
மேன்மேலும் புதிய உயிர்
விளைத்தல் கண்டீர்.

இப்பாட்டின் பொருள் அறிந்துணர்ந்து சிரமேற்கொள்ளுதலுசிதம். மண்ணுண்ணிமாப்பிள்ளை போல் இருந்து விடாமல், தேசநிலை, சமூகநிலை, மதமார்க்கநிலை, இவற்றையறிந்து வருங்கால மக்களுக்குப் போதகவியாயிருக்கும் வழியில் வளர்ச்சிக்கு சொல்ல உழையும். மாப்பிள்ளைக்கலகத்தில்நீவிர் கூறும் பெரியார்கள் இருந்திருப்பின் என்செய்திருப்பர்? இஸ்லாம் இந்து ஒற்றுமை, தீண்டாமை அகற்றல் என்ற இயக்கங்களில் நம்பிக்கை நமக்கு இல்லையேல் அதற்கு மருந்தே கிடையாது. இவை சமய ஆவசியமெனுந் தன்னுணர்ச்சியில்லாதவனுக்கு, இன்ஜெக்ஷன் செய்திடினும், ஊசிகுத்தி மருந்தேத்தினும் பயன்ஏற்படாது. மதம்என்ற மௌடீகத்தடிப்பு அறியாமையிலும் அடிமைத்தனத்திலும் உள்ளமிழ்ந்திக்கிடக்குங்கால் மக்களின் சுயஅறிவுச் சுடர் மழுங்குவது சுபாவம். பிராமணன் எனும் ஒரு அந்தணனை நீவிர் ஏன் பிராமணர் என வினவினால் விடைபகரவல்லுனர்களாக உள்ளாரா? இல்லை! இருந்தாலும் 'என் தகப்பன் பிராமணன், எனது பாட்டன் வேதியன், எங்கள் முப்பாட்டான் அந்தணர். எமது ரிஷி......எம் கோத்திரம்......' என்ற சரித்திரக்குப்பையை ஆஜர்ப்படுத்துவரே தவிர பிரத்தியட்சமாகத் தம் ஆசாரம் அனுபவம் முதலிய இயல்பில் பதிலளிக்கார். ஆகவே தபால் ஆபீஸுகளில் ஸ்டாம்புகள் ஒட்டப்பட்டோ அல்லது பெயரிக்காகவோ நடமாடும் பார்சல்களைப்போல் தாமும் வருணச்சிரம லேபிள்கள் ஒட்டப்பட்டோர் அல்லாமலே காலக்ஷேபிப்பவராகுவர். கருமாந்திரம், சோபனம், திருமணம் முதலியவைகளில் தம்பைதாங்கிப்பிழைக்க வல்லவர்களாயிருப்பார். இத்தகைய கோஷ்டியாருக்கு ஏன் இந்தக்குறும்பு? உலகம் போற்ற, ரௌலட் சட்டத்திற்கெதிர் சத்தியாக்கிரகத்தையும் பின்னர் ஒத்துழையாமையையும் தோற்றுவித்து, அமெரிக்கா ஆசியா அமெரிக்கா கண்டத்தினர்கள் மெச்சியும், ஜெப்பான்காரர்கள் அங்கீகரித்தும், பிரிட்டிஷ் கவர்ன்மெண்டும் அவ்வியக்கங்களின் தட்பங்களை அறிய முற்பட்டுள்ளதைச் செவியுற்றிருத்தல் வேண்டும். அவைவுமில்லாமல் காகபுஷண்டரின் சமஸ்கிருதமாகிலும் தெரிந்து வேதபாராயணம் ஒரு நாளாகிலும் செய்திருப்பீரேல் சுயராஜ்யம் சாம்ராஜ்யம் என்ற பதங்கள் கண்டிருப்பீர்; உச்சரித்திருப்பீர்; அர்த்தமும் உணர்ந்திருப்பீர். அவையுமில்லாத காவணிற்கு விளக்கமெங்ஙன மேற்படலாம்? இருப்பினும் இக்குணஞ்ஞனின் மதித்திறமே திறம்! குரோம் லெதர் கம்பெனியில் நல்ல விலையும் பெறலாம்!

அருள்வயப்பட்டு ஒருக்கால், தானே ஒளிவுறுவன..........வென்ற அடைமொழி புனைக்கும் மந்தாட்சத்தை பல சரக்குக்கடைகளிலும் வாங்கக் கிடைக்காதெனவே கருதுகின்றோம். உடன் உண்ணுதல், விதவா விவாகம் என்ற விடயங்களிலும் தலையிட்டுள்ளார். எனவே திருஷ்டிதோஷம், ஸ்பர்ச தோஷம்மனைவியிழந்தவர்களின்மணம் என்பனவைகளுக்குத் தன்னை நிமித்திகளாகக் கருதி அப்பித்தலகின் பயன்களை நுகாமுற்பட்டுள்ளார். உடைவிடயரில், "இறைவன் அருட் செயலாற் காலந்தவறாது மழை பெய்துவரின் பருத்தி முதலிய பொருள்கள் நன்றாக விளைவுற்று......" எனக் கூறுவதினால் இவரும் இவரை ஒப்புவார்களும் தரிக்கும் பூநூலே, மான்செஸ்டர் அல்லது டோக்கியோ நூல்களிலேயேதரித்துக் கொண்டால் ஆவணியாவிட்ட அலுவல்கள் மிகச் சுலபமாகும் என்பதை நாம் நினைவூட்டுகின்றோம். சக்தி என்ற பெரும்பாதகம், வேத ஆகமத்தைக் கடைப்பிடித் தொழுகும் நெறியெனவே ஒருசமயம் நம் நாட்டில் பல பாதகர்கள் கருதியிருந்தனர். மனைவியை இழந்தவன் கால்டஜனுகிலும் விவாகம் செய்து கொண்டு இன்புற்று வாழுமாறு, தக்ஷிணை சோமன் என்பவைக்குக நந்தவாறு தெய்வ மொழி வாழ்த்துக்கூற முற்படும் பாமரர்கள், ஒரு வயதுமுதல் இருபதுவயது வரையுள்ள கைம்பெண்களை மணம் புரியவும் இறைவன் அருட்பேறுகள் பெறவும், வேதஆகாம புராண இதிகாச சந்தடிகளனுமதிக்கவில்லை என்கின்றனர். கோயில்களில் சென்று செவிசாய்க்க நாகசுரமும், கண்ணுற தேவதாசிகள் நர்த்தனமும், அகன்ற ஆகாரத்திக்கு கோயில் மடப்பள்ளி அல்லது நகரத்தினர் சத்திரமும், உறக்கத்திற்கு சன்னியாஸி மடங்கள் அல்லது கோயில் மண்டபங்களும், சீட்டுப் போட அக்கிராஹாரத்தெருத்திண்ணைகளும், கொண்டுள்ள கிராமத்தில் வசித்து வாழ்ந்துவரும் காளையார் கோயில் ஐயர் குஜராத் வித்யா பீடாதிபதியும், அகில இந்திய கதாலய அரசனும், சபர்மதிஆஸ்மரத்தலைவனும், சத்தியாக்கிரகப் போர்வீரனும், ஒத்துழையாமை இயக்க சேனாதிபதியுமாகிய காந்தியடிகளை மகாத்மாவெனக் கூறலாமோ வெனக் கழறுகின்றார். இதைக் கொட்டை எழுத்தில் தலையங்கம் அச்சிட்டு, வெளிப்படுத்தமுயன்ற சிவநேசன் பத்திரிகை ஆசிரியரின் போக்கையும் கவனிக்கின் வியப்புகளுண்டாகின்றன.

## நோட்டீஸ்.

இராமநாதபுரம் ஜில்லா எழுவங்கோட்டை தாலூகா கல்லல் கிராமத்திலிருக்கும் மு. மு. மூத்தையா செட்டியார் இதனால் பொது ஜனங்களுக்குத் தெரிவிப்பது என்ன வென்றால்:—

எனக்கு சுயார்ஜிதமான சொத்துக்கள் தவிர பிதரார்ஜித சொத்துக்கள் கொஞ்சமும் கிடையாது. எனக்கு (1) சிதம்பரஞ் செட்டியார் (2) வெங்கிடாஜலஞ் செட்டியார் என்ற இரு குமாரர்கள் இருக்கின்றனர். இவர்களில் இளைய குமாரனை மு. வெங்கிடாஜலஞ் செட்டியார் சரியான நடத்தையில்லாமலும் சில துன்மார்க்கர்களுடன் சகவாசம் வைத்துக்கொண்டு துன்மார்க்க வழிகளில் பிரவர்த்தகம் செய்துகொண்டும் ஷை துன்மார்க்கமான செலவுகளுக்கு பக்கங்களில் சொற்ப தொகைகள் வாங்கிக்கொண்டு அதிகமான தொகைகளுக்கு புரோநோட்டுகள், உண்டியல்கள், மற்றும் தஸ்தாவேஜுகள் முதலியன எழுதிக் கொடுத்துக்கொண்டும் யாதொருவிதமான பிரதிப்பிரயோஜனமும் பெற்றுக்கொள்ளாமலே பிரதிப்பிரயோஜனம் பெற்றுக்கொண்டதாகமட்டும் தஸ்தாவேஜுகள் எழுதிக்கொடுத்துக் கொண்டும் மற்றும் பலவித கெட்டகாரியங்கள் செய்து கொண்டுமிருக்கிறான்.

ஷையானுக்கு என்னுடைய சுயார்ஜிதமான சொத்துக்களில் எவ்விதமான பாத்தியமும் சம்பந்தமும் தொடர்ச்சியும் கிடையாது.

மேற்கண்டபடி ஷையான் செயல்களினால் ஷையானிடமிருந்து புரோநோட்டுகள், தஸ்தாவேஜுகள் முதலியன ஏதேனும் யாரேனும் ஏற்படுத்தி வைத்துக்கொண்டிருந்தால் அவைகள் செல்லக்கூடியவைகளுமல்ல. அவைகள் என்னையாவது என் சொத்துக்களையாவது எவ்விதத்திலும் கட்டுப்படுத்தக் கூடியவைகளுமல்ல வென்பதை இந்த நோட்டீஸ் மூலம் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

இப்படிக்கு,
மு. மு. முத்தைய்யா செட்டியார்.





# காந்தி அடிகளின் இலங்கை விஜயம்.

### தியத்தளாவை.

காந்தியடிகளும் ஏனையோரும் வெள்ளிக்கிழமை யன்று இரவு (கஃ-கக-உஎ) கo மணி சுமாருக்கு அரசாங்கத்தாரால் காந்தியடிகளுக்கு அளிக்கப்பெற்றிருந்த ஸ்பெஷல் ஸலூனில் கண்டியிலிருந்து பதுளைக்குப் பிரயாணமாயினர். காலையில் ரயில் தியத்தளாவை ஸ்டேஷனுக்கு வந்ததும் அங்குள்ள சர்வேயர்கள் மகாத்மாவைச்சந்தித்துப் பணப்பையொன்று அளித்தனர்.

### பண்டாரவேளை.

ரயில் பண்டாரவேளை வந்து சேர்ந்ததும் பொதுஜனங்களின் சார்பாக திரு சொக்கலிங்கம் செட்டியார் பணப்பை யொன்று சமர்ப்பித்தார். மகாத்மா காந்தி பதிலளிக்கையில் கதர், தீண்டாமை, மதுவிலக்கு முதலியனபற்றிச் சில உரைகள் வழங்கினர்.

### பதுளை.

காலை பத்து மணி சுமாருக்கு ரயில் தொடர் பதுளை ரயில் ஸ்டேஷன் வந்து சேர்ந்தது. மகாத்மா ரயிலைவிட்டு இறங்கியதும் கனம் கொத்தலாவெளை அவருக்கு மாலையிட்டு நன்கு அலங்கரிக்கப்பட்டிருந்த மோட்டாரில் "ஸ்வாஸ்திகா" எனும் மாளிகைக்கு அழைத்துச் சென்றார். மாலையில் பொதுக்கூட்டம் நடைபெற்றது. ஏராளமான தோட்டத் தொழிலாளர்கள் விஜயம் செய்திருந்தனர். கனம் கொத்தலாவெளை ஓர் வரவேற்புப் பத்திரம் படித்துக் கொடுத்துப்பொதுஜனங்களின் சார்பாக ரூ சுஉOO அடங்கிய பணமுடிப்பைச் சமர்ப்பித்தார். ஊனுகலை வாலிப சங்கத்தார் ஓர் பண முடிப்பு வழங்கினர். மகாத்மா அவற்றை ஏற்றுக் கொண்டு விடையளிக்கையில் தொழிலாளர்களிடையே சில தினங்கள் தங்கியிருந்து அவர்களது குறைகளை அறிய வேண்டுமென்பதுதனது பேரவாவென்றும், அவ்வாறு செய்யமுடியாமைக்குத் தன்னை அவர்கள் மன்னிக்கவேண்டுமென்றும், அனைவரும் கதர் தரிக்கவேண்டுமென்றும், மதுவருந்தலை ஒழிக்க வேண்டுமென்றும் கேட்டுக்கொண்டார்.

### நூரளை.

ஞாயிற்றுக்கிழமை காலை (உO–கக–உஎ) மகாத்மாவும் மற்றயோரும் பதுளையிலிருந்து மோட்டாரில் புறப்பட்டு நூரளை வந்து சேர்ந்தனர். ஏராளமான ஜனங்கள் மகாத்மாவைத் தரிசிக்க வந்துகூடியிருந்தனர். மாதர்கள் புஷ்பமாரி பொழிந்தனர். பொது ஜனங்களின் சார்பாக ஓர் வரவேற்புப் பத்திரமும் ஓர் பணமுடிப்பும் அளிக்கப்பெற்றது. பின்னர் ஓர் தமிழ் கனவான் தொழிலாளர்களின் சார்பாக ரூ ௫Oகஎ அடங்கிய பணமுடிப்பொன்று சமர்ப்பித்தார். மகாத்மாஜி இவைகளை யெல்லாம் ஏற்றுக்கொண்டு விடையிறுக்கையில் கதர் இயக்கத்திற்கு அனைவரும் ஆதரவுகாட்ட வேண்டுமென்றும், குடிப்பேயையும், தீண்டாமை யெனும் பேயையும் ஒழிக்க வேண்டுமென்றும் வற்புறுத்தினர். பிறகு அங்கிருந்து அனைவரும் ஹட்டனுக்குப் புறப்பட்டனர்.

### ஹட்டன்.

பகல் கஉ மணி சுமாருக்கு காந்தியடிகள் ஹட்டன் வந்து சேர்ந்தார். அன்று ஞாயிற்றுக் கிழமையாதலால் தோட்டத்தொழிலாளர்களுக்கு விடுமுறை தினமாகும். எனவே அப்பகுதியிலுள்ள தொழிலாளர்களெல்லாம் மகாத்மாவைத் தரிசிக்க வந்திருந்தனர். சுமார் சுO ஆயிரம் ஜனங்களிருக்குமெனலாம். கார்பாக்ஸ் தோட்ட சொந்தக்காரரான திரு சுப்பு ரெட்டியார் தனது தோட்டத்திற்கு மகாத்மாவை அழைத்துச் சென்றார். ஹெட் கங்காணிகள் சங்கச் சார்பாகவும் ஹட்டன் பொதுஜனங்கள் சார்பாகவும் வரவேற்புப் பத்திரங்களும் பண முடிப்புக்களும் வழங்கப்பெற்றன.

### நாவலப்பட்டி

மாலை ௫ மணி சுமாருக்கு மகாத்மாவின் மோட்டார் நாவலப்பட்டி வந்துசேர்ந்தது. பொது ஜனங்களின் சார்பாக ஓர் வரவேற்புப் பத்திரமும் ரூ ௬OOO அடங்கிய பணமுடிப்பும் மகாத்மாவினிடம் சமர்ப்பிக்கப்பெற்றன.

### கம்பளை.

எ–௬O மணிக்கு மகாத்மா கம்பளைவந்து சேர்ந்தார். அங்கு கூடியிருந் தோரின் சார்பாக திரு வான் லாங்கன்பர்க் அடிகளை வரவேற்றார். திரு பழ. மு. லெட்சுமணன் செட்டியார் ரூ உஉ௫O அடங்கிய பணமுடிப்பை மகாத்மாவினிடம் சமர்ப்பித்தார். மகாத்மா சில உரைகள் வழங்கிவிட்டு கண்டிக்குப் புறப்பட்டார். இரவு எட்டு மணிக்கு அனைவரும் கண்டி வந்து சேர்ந்தனர். மறுநாள் (உஉ–கக–உஎ) திங்கட்கிழமை மௌனதினமாகையால் எவ்வித வேலையும் நடைபெறவில்லை. கண்டியிலேயே தங்கியிருந்தார்.

### கொழும்பு.

செவ்வாய்க்கிழமை யன்று காலை (உஉ—கக—உஎ) காந்தியடிகள் மற்றையோருடன் கண்டியிலிருந்து புறப்பட்டு கடுகன்னு, கேகாலை, அட்டங்காலை முதலிய விடங்களில் சிறிது தங்கிவிட்டுக் கொழும்பு வந்து சேர்ந்தார்.

### ஸஹிரா கலாசாலை.

மாலை ௬ மணி சுமாருக்கு மகாத்மா ஸஹீரா கலாசாலையில் உபாத்தியாயர்களாலும் மாணவர்களாலும் வரவேற்கப்பட்டு உபசரிக்கபபட்டார். கலாசாலைத் தலைவர் மகாத்மாவை வரவேற்றுச் சில உரைகள் வழங்கிய பின்னர் மகாத்மா காந்தி சிறிது பேசினர்.

### தமிழ் மாதர்கள் வரவேற்பு.

மாலை ௬-௬O மணிக்கு இலங்கை மாதர் சங்க அங்கத்தினரும் கொழும்பு தமிழ் மாதர் சங்கத்தினரும் மகாத்மாவை 'ஆர்க்' மாளிகையில் வரவேற்று உபசரித்தனர். ஸ்ரீமதி இ. ஆர். தம்பி முத்து கதரில் தயாரிக்கப்பெற்ற ஓர் வரவேற்புப் பத்திரத்தைப் படித்துக்கொடுத்தார். ரூ. க௫OO கொண்ட பண முடிப்பும் அளிக்கப்பெற்றது. மகாத்மா அவற்றை ஏற்றுக்கொண்டு விடையளிக்கையில் ஒவ்வொருவரும் சீதையைப்போல் வாழ்க்கை நடத்தவேண்டுமென்றும், ஒவ்வொரு வீட்டிலும் இராட்டினம் சுழற்றப்படவேண்டுமென்றும், விலையுயர்ந்த ஆபரணங்களையும், ஆடைகளையும் மாதர்கள் அணியலாகாதென்றும் குறிப்பிட்டார்.

### காங்கிரஸ் வரவேற்பு.

மாலை ௪ மணிக்கு இலங்கை தேசிய காங்கிரஸ் சபையார் பப்ளிக் ஹாலில் மகாத்மாவை வரவேற்று உபசரித்தனர். ஏராளமான ஜனங்கள் விஜயம் செய்திருந்தனர். காங்கிரஸ்சபைத்தலைவர் மகாத்மாவை வரவேற்றுச் சில உரைகள் வழங்கிய பின்னர் மகாத்மா அரியதோர் சொற்பொழிவு நிகழ்த்தினர். அரசியல் வாழ்க்கையைத் தூய்மைப்படுத்தவேண்டிய அவசியத்தை நன்கு வற்புறுத்தினர். தன்னாட்சியின் உண்மைப்பொருள் என்னவென்பதைப் பற்றியும் அஹிம்ஸையைப் பற்றியும் தெளிவாக எடுத்துரைத்தார்.

### கொழும்பு மாதர்கள் வரவேற்பு.

மாலை ௬-மணிக்கு கொள்ளுப்பிட்டியிலுள்ள 'டர்ரன்ட்ஸ்' எனும் மாளிகையில் கொழும்பு மாதர்களின் சார்பாக காந்தியடிகள் வரவேற்று உபசரிக்கப்பட்டார். லேடி அருணாசலம் மாதர்களின் சார்பாக ஓர் பணப்பை சமர்ப்பித்தார். மகாத்மா அதனை ஏற்றுக்கொண்டு சில புத்திமதிகள் கூறினர்.

### தமிழ் யூனியன் சங்கத்தாரது உபசரிப்பு.

மாலை எ-௬O மணிக்கு மகாத்மாவை கொழும்பு தமிழ் யூனியன் சங்கத்தார் வரவேற்று உபசரித்தனர். அச்சங்கத்தின் சார்பாக ஸர் பொன்னம்பலம் இராமநாதனவர்கள் மகாத்மாவை வரவேற்றுச் சிறிது நேரம் பேசிவிட்டு, கதர் நிதி எவ்வாறு செலவு செய்யப்பெறுகிறதென்று விளக்குமாறு மகாத்மாவைக் கேட்டுக்கொண்டார். மகாத்மா காந்தி தனது விடையில் கதர் நிதி எவ்வாறு செலவிடப்படுகிற தென்பதை நன்கு விளக்கினர்.

### இந்து வாலிபர் சங்கம்.

மாத்மா ஜிந்துப்பட்டி நாடக சாலைக்குச் செல்லுகையில் இந்து வாலிப சங்கத்தார் அடிகளை வரவேற்று ஓர் பணமுடிப்பு வழங்கினர்.

### வித்தியா விநோத சபையார்.

கொழும்பு வித்தியா விநோத சபையார் கதர் நிதி உதவிக்காக ஜிந்துப்பிட்டி நாடக மண்டபத்தில், 'பாதுகா பட்டாபிஷேகம்' எனும் நாடகத்தை நடித்துக் காண்பித்தனர். இதற்கு மகாத்மா விஜயம் செய்திருந்தார். சபைத்தலைவர் மகாத்மாவை வரவேற்று உபசரித்தார். சபையாரின் சார்பாக திரு. எம். ஏ. அருள் ஆனந்தன் ரூ. ௫OO அடங்கிய பண முடிப்பை அடிகளினிடம் சேர்ப்பித்தார்.

### மவுண்ட் லவினா.

புதன்கிழமையன்று (உ௬-கக-உஎ) காலை மகாத்மா தென் இலங்கைப்பிரயாணத்தைத் துவங்கினர். மவுண்ட் லவீனா வந்ததும் ஏராளமான ஜனங்கள் அவரை வரவேற்றனர். சுதேச பாஷைப் பள்ளிக்கூடத்திற்கு அழைத்துச் சென்றனர். அங்கு ஓலையில் தயாரிக்கப்பெற்ற வரவேற்பு ஒன்று ஓர் பேழையில் வைத்துக் கொடுக்கப்பெற்றது. ரூ. ௫OO கொண்ட பண முடிப்பும் வழங்கப்பெற்றது. மகாத்மா சில இன்னுரைகள் வழங்கிவிட்டுப் புறப்பட்டார்.

### மோரட்டுவா.

மகாத்மா காந்தி மொரட்டுவா வந்து சேர்ந்ததும் மொரட்டுவா மகாஜன சபையார் நகர மண்டபத்தில் மகாத்மாவை வரவேற்று உபசரித்தனர். மகாத்மா பதிலளிக்கையில், கதர் தீண்டாமை முதலியனபற்றிப் பேசினர். ஓர் பண முடிப்பு அவரிடம் சமர்ப்பிக்கப்பெற்றது.

### களுத்துறை.

நடுப் பகலில் மகாத்மா களுத்துறை வந்து சேர்ந்தார். சுற்றுப்பக்கங்களிலிருந்தெல்லாம் ஜனங்கள் ஏராளமாக விஜயம் செய்திருந்தனர். நகர மண்டபத்தில் வரவேற்கப்பட்டு உபசரிக்கப்பட்டார். பொது ஜனங்களின் சார்பாகவும், மோட்டார் ஓட்டிகளின் சார்பாகவும் வரவேற்புப் பத்திரங்கள் வாசித்துக் கொடுக்கப்பட்டன. ரூ. உOOO அடங்கிய பண முடிப்பொன்று வழங்கப்பெற்றது. மகாத்மா மதுவிலக்கு தீண்டாமை முதலியவற்றை விளக்கிப் பேசினர்.

### அம்பலாங்கோடை.

களுத்துறையில் பகல் போஜனம் முடித்துக்கொண்டு காந்தியடிகள் மோட்டாரில் புறப்பட்டார். உருவத்தை, மாதம்பை, முதலிய இடங்களில் காந்தி உபசரிக்கப்பெற்றார். அம்பலாங் கொடையில் தென் மாகாண ராஜீய மாகாநாட்டின் சார்பாகவும், மாதம பாகம மகாஜன சபையாரின் சார்பாகவும் வரவேற்புப் பத்திரங்கள் அளிக்கப்பெற்றன. மகாத்மா அவற்றையேற்றுக்கொண்டு தனக்கு நெடுநேரம் பேசப் போதிய அவகாச மில்லையென்றும், மயக்க வஸ்துக்களை அனைவரும் விலக்க வேண்டுமென்றும் சாதிப் பாகுபாடுகள் ஒழிய வேண்டுமென்றும்கூறிவிட்டுப்புறப்பட்டார்.

### காலி.

மாலை நான்கு மணி சுமாருக்குக் காந்தியடிகள் காலி நகர் வந்து சேர்ந்தனர். நகர சபையின் சார்பாக வரவேற்புப் பத்திரம் படித்துக் கொடுக்கப் பட்டது. பல உபசாரப் பத்திரங்கள் வழங்கப்பட்டன. நகரத்தார்கள்சார்பாகவும், பொதுஜனங்கள் சார்பாகவும், நகரத்தார்களின் கணக்கப்பிள்ளைகள் சார்பாகவும், கங்காணிகள் சார்பாகவும், தொழிலாளர் சார்பாகவும் பணமுடிப்புகள் அளிக்கப் பெற்றன. மகாத்மா காந்தி அவையனைத்தையும் ஏற்றுக் கொண்டு அவற்றிற்கு மொத்தமாக விடையளிக்கையில் மதுவால் வரும் கேடுகளையும் கதர் தரிக்க வேண்டிய அவசியத்தையும் விளக்கினர்.

### அக்மிமாண.

வியாழக்கிழமை யன்று காலை (உ௪-கக-உஎ) மகாத்மா காலியிலிருந்து மாத்தரைக்குச் செல்லும் வழியில் அக்மிமாண என்னுமிடத்தில் பொது ஜனங்களால் உபசரிக்கப்பெற்றார். ரூ உ௫O கொண்ட பணமுடிப்பு வழங்கப்பெற்றது. பின்னர் அக்மிமாண பெண்கள் நெசவுச் சாலைக் கட்டிடத்திற்குக் காந்தியடிகள் அஸ்திவாரக்கல் நாட்டினர். மகாத்மா சிறிது உபதேசம் செய்த பின்னர் மாத்திரைக்குப் புறப்பட்டார்.

### மஹிந்தா கலாசாலை.

மாத்தரை ஜனங்களின் உபசாரத்தை ஏற்றுக் கொண்டு மகாத்மா பிற்பகலில் காலிக்குத் திரும்பினர். மகிந்தா கலாசாலைப் பரிசளிப்பு விழா அடிகளின் தலைமையில் நடைபெற்றது. பரிசளிப்பு வைபவம் முடிந்ததும் மகாத்மா அரியதோர் சொற்பொழிவு நிகழ்த்தினர். மாலை ௬ மணிக்கு ரயில் மூலமாக கொழும்பிற்குப் பிரயாணமானர்.

### கொழும்பு.

வெள்ளிக்கிழமை யன்று காலை புத்த வாலிப சங்கத்தார் பொரளையில் மகாத்மாவை வரவேற்று உபசரித்தனர். புத்த மதக் கொள்கைகளை அடிகள் அவர்களுக்கு உபதேசித்தனர். ரூ ௬OO கொண்ட பண முடிப்பு வழங்கப்பெற்றது.

### இலங்கை ரெட்டியார் மகாஜன சங்கம்.

காலை கO மணிக்கு ரெட்டியார் மகாஜன சங்கத்தார் அடிகளை பப்ளிக் ஹாலில் உபசரித்து ரூ கOசுக அடங்கிய பணமுடிப்பு அளித்தனர். கும்பினித் தெரு பகுதியாரின் சார்பாக டாக்டர் முத்தையா ரூ கO௪O-ம் இலங்கை வாலிபர் சங்கச் சார்பாக கனம் கொரியா ஓர் பண முடிப்பும், காந்தி சங்கச் சார்பில் ரூ எ௫ம், பரத வாலிபர் சங்கச் சார்பாக ரூ ககக-ம் அடிகளிடம் சேர்ப்பிக்கப் செற்றன. மாலையில் யாழ்ப்பாணத்திற்கு காந்தியடிகளும் மற்றையோரும் ரயிலில் பிரயாணமாயினர். வழியனுப்ப ஏராளமான ஜனங்கள் கூடியிருந்தனர்.

### இலங்கை இந்தியர் சங்கம்.

காலை கO–கOமணி சுமாருக்கு இலங்கை இந்திய சங்கத்தார் மகாத்மாவை மருதானை டவர் ஹாலில் வரவேற்று உபசரித்தனர். மகாத்மா சிறிது நேரம் பேசியபின் திரு ஜி. ஆர். மோத்தா ரூ கஅOக அடங்கிய பண முடிப்பை அடிகளிடம் சேர்ப்பித்தார்.

### இலங்கையரின் பொது வரவேற்பு.

மாலை நான்கு மணிக்கு மகாத்மா இலங்கை வேற்புக் கழகத்தார் மகாத்மாவை காம்பல்பார்க்கில் வரவேற்று உபசரித்தனர். மகாத்மாவின் உபதேசங்களைக் கேட்க ஏராளமான ஜனங்கள் குழுமியிருந்தனர். வரவேற்புக் கழகத்தாரின் சார்பாக டாக்டர் முத்தையா ரூ எஉ௫O மகாத்மாவினிடம் சமர்ப்பித்தார். மகாத்மா அதனை ஏற்றுக்கொண்டு அவர்களுக்கு தக்கவாறு வந்தனங்கூறினர்.

### யாழ்ப்பாணம்.

மாத்மாவை சனிக்கிழமை காலை (உ௬-கக உஎ) ஏராளமான ஜனங்கள் எதிர்கொண்டழைத்து வரவேற்றனர். மாலையில் பொது ஜனங்களின் சார்பாகவும் இந்தியர்களின் சாபாகவும் வரவேற்புப் பத்திரங்களும் பண முடிப்புக்களும் வழங்கப் பெற்றன. மாலை நான்கு மணிக்கு கனம் துரைஸாமியவர்கள் மகாத்மாவின் விஜயத்தை முன்னிட்டுச் சிற்றுண்டி விருந்தொன்று அளித்தார். ௬ மணி சுமாருக்கு மாணவர் மகாநாட்டுக்கு மகாத்மா விஜயம் செய்து சிறிது நேரம் பேசினர். ஞாயிற்றுக்கிழமை (உஎ-கக-உஎ) காலை, யாழ்ப்பாணம் இந்து காலாலை, பரமேஸ்வரர் கலாசாலை, மானிப் பாய் இந்து கலாசாலை முதலியவற்றைக் காந்தியடிகள் பார்வை யிட்டார். மாலையில் புத்தூர், அச்சவேலி, வல்வெட்டித், துறை, பருத்தித் துறை, சாவகச்சேரி, சுன்னாகம் முதலிய விடங்களுக்கு விஜயம் செய்தார். ௬ மணி சுமாருக்கு சுருட்டு வேலைக்காரர்கள் வரவேற்று உபசரித்தனர். பிறகு சில பாதிரிகள் அடிகளைச் சந்தித்துச் சம்பாஷித்துக் கொண்டிருந்தனர். எ மணி சுமாருக்கு யாழ்ப்பாணம் இந்து கலாசாலையில் இந்துக்களுக்கு ஓர் சொற்பொழிவு நிகழ்த்தினர். மறுதினம் திங்கட்கிழமை மௌன தினம். செவ்வாய்க்கிழமை (உஅ-கக-உஎ) காலை வெண்டிரல் கலாசாலை, ராமனுதன் கலாசாலை ஆகியவற்றைப் பார்வையிட்டார். கந்தரோடை, சுன்னாகம், தெல்லி, பல்லி, உடுவேலி பெண்பாடசாலை ஆகிய விடங்களுக்கு விஜயம் செய்தார். மாலையில் யாழ்ப்பாணம்கலாசாலையையும், விக்டோரியாகலாசாலையும் பார்வையிட்டார். காரை நகருக்கு விஜயம் செய்தார். ௬ மணிக்கு ரயிலில் இந்தியாவிற்குப்பிரயாணமானர். மட்டக் களப்பு, திரிகோணமலை முதலியவிடங்களுக்கு அடிகள் விஜயம் செய்யவில்லை. இலங்கை விஜயத்தில் மொத்தம் ஏறக்குறைய ஒரு லட்ச ரூபாய் வசூலாயிருக்குமென்று தெரிகிறது.

உள்ளுறை.



நாளென் செயும்! வினைதானென்
செயும்! எனைநாடி வந்த
கோளென் செயும்! கொடுங்கூற்
றென் செயும்! குமரேசரிரு
தாளும் சிலம்புஞ் சதங்கையும்
தண்டையும் ஷண்முகமும்
தோளும் கடம்பும் எனக்கு முன்
னேவந்து தோன்றிடினே.

—கந்தரலங்காரம்.

குமரன், காரைக்குடி.
பிரபவ ஞூ கார்த்திகை மீ கசுஉ

## சர். சதாசிவ அய்யர்.

ஆசாரச் சீர்திருத்தச் செல்வரான நீதிபதி சர். சதாசிவ ஐயரவர்கள் சென்ற வியாழனன்று இவ்வுலக வாழ்வை நீத்தாரென்ற செய்தி கேட்டுப் பெரு வருத்தமுறுகின்றோம். ஆசாரத்திருத்த நெறியில் நின்றுழைப் போர் ஒவ்வொருவரும் திரு. ஐயரவர்களின்பிரிவுக்குவருந்தாமலிரார். பிறப்பினல் உயர்வு பெற்றிருப்பதாக எண்ணி இறுமாந்து இடருற்றழியும் பார்ப்பனக் குலத்தில்தான் இப்பெரியாரும் தோன்றினர். பிறப்பினல் உயர்வு உடையோம் என்ற உணர்வை திரு. சதாசிவர் எவ்விடத்திலுங் காட்டினரில்லை. அவ்வுணர்ச்சியே அவருக்கு அற்றுவிட்டதென்னலாம். பாலிய வயதிலேயே கல்வி கற்றுத் தேர்ச்சி பெற்றார். நீதிபதி உத்தியோகம் பெற்று அந்நெறியில் திறமையும் நேர்மையுங் கொண்டுழைத்து யாவராலும் புகழப்பெற்றார். அரசியல் நிர்வாகத்திற்கு நீதி கட்டுப்பட்டதல்லவென ஆண்மையோடும் நேர்மையோடும் திரு சதாசிவர் எடுத்துக் காட்டுவது போல் பல வழக்குகளிலும் தீர்ப்பு அளித்திருப்பது பெரிதும கொண்டாடத்தக்க தன்றோ? அப்பெரியாரது நீதி முறையானது சட்டவாம்பிற் செல்லும் நீதிவாத முடிவைமட்டும் காட்டவில்லை யென்பது பெரிதுங் குறிப்பிடத்தக்கதாகும். நீதிநெறியில் சென்ற திரு. சதாசிவரின் மனமானது ஜாதி நெறியினும் நீதி கண்டது. தாழ்ந்தோரென்று கூறி நசுக்கப்பட்டுக் கிடக்கும் மக்கள்பால் திரு ஐயரவர்கள் அன்பு காட்டியதை எவரால் மறக்க முடியும்?

இன்றைய நிலையில் சமபந்தி போஜனமும் தீண்டாமை விலக்கும் ஒருவாறு சுலபமாகிவிட்டன. பத்து—இருபதாண்டுகட்கு முன்னர் இவ்விஷயங்களைப்பற்றிப் பேசுதல் கூட எளிதாக இருக்கவில்லை யென்பதைப் பலரறிவர். அந்தத் துருப்பிடித்த நாளில் ஆண்மையோடு ஆசாரத் திருத்த நெறியில் முன்னின்ற வீரர் திரு. சதாசிவ ஐயராவரென்பதை மறக்க முடியுமோ? அக்காலம் முதல் இக்காலம்வரை இம்மாதிரி ஆசாரத் திருத்த நெறியில் முன்னிற்கும் உத்தமர்களைத் திட்டிப் புடைப்பதையே தருமமெனக் கொண்ட போலிப்பார்ப்பனருடைய வாய்ப்பூசலுக்கு திரு ஐயரவர்களும் இலக்கானரென்று கூறவேண்டியதில்லை. மேலான உத்தியோகம் வகித்தபடியாலும, பிறரை எதிர்பார்க்க வேண்டிய அவசியமில்லாதபடியாலும், சீர்திருத்தநெறியில ஆர்வமும் தைரியமுமிருந்தபடியாலுமே திரு. ஐயரவர்கள் கொஞ்சமும பின் வாங்காது ஊக்கொண்டு இவ்வழியில் நின்றனர். செல்வமும் செல்வாக்குமேற ஏற ஆசையும் பயமும் ஏற்படுவது சாதாரண மனித இயல்பாகும். சுற்றத்தாரும் குலத்தாரும் தூற்றுவதற்காகக் கொள்கையை இழந்து போலிக் கௌரவம் சம்பாதிக்க எண்ணுவோர் மலிந்த இந்நாளில் திரு. சதாசிவர் தமது முதுமைப்பருவம் வரையும்பிடிவாதமாகநின்று தங்கொள்கையை ஆதரித்தமை பெரிதும்பாராட்டத் தக்கதாகும். ஹிந்து மத ஸ்தாபன பரிபாலன சட்டத்தைக்கண்டு பார்ப்பனர் யாவரும் வதில்வெட்டு வைதிகரையுந் துணை சேர்த்துக் கொண்டு ஆர்ப்பாட்டம் செய்ததையும் பொருட்படுத்தாமல் அந்த போர்டின் தலைமைப் பதவி யேற்க முன்வந்தது அப்பெரியாரது நேர்மையையும் ஆண்மையையுங் காட்டுதற்குப் போதிய ஆதாரமாகுமன்றோ?

ஆங்கிலப் புலமையோடு வடமொழி யறிவுங் கொண்டிருந்த நமது சதாசிவர், வறட்டு வைதிகர்களைப்போல மொந்தையுருவேற்றாது வடமொழி நூல்களின் உள்ளக்கிடக்கையை யறிந்து அனுபவத்தில் கொண்டுவர முயன்றவராவார். நம் நாட்டு சாஸ்திரிகள் எல்லையற்ற நூல்களைப் படித்திருப்பர். ஆனல் உணர்ச்சி யென்ப தொன்றுமின்றிப் பகுத்தறிவற்ற பிண்டமாக இருப்பர். திரு சதாசிவய்யரின் பரிசுத்தமான நீதி நிலவும் மனத்தில் மனுதருமம் போன்ற புன்மை நூல்களின் நீதி ஒவ்வி நிற்றல் கூடுமோ? ஜாதி பேதமும் சமயப் பிரட்டும் நாட்டைவிட்டுவிலக வேண்டுமென்ற எண்ணம் திரு சதாசிவ ஐயரின் மனத்தில் அழுத்தமாகப் பதிந்து வளரலாயிற்று. இதன் பயனகவே பல அரிய காரியங்களைச் செய்துள்ளார்.

தற்போது நடைபெற்றுவரும் திருவண்ணுமலைக் கோயில் வழக்கில் அவர் கூறியிருக்கும் சாட்சியத்திலிருந்தே அவருடைய மேன்மையும், சீர்திருத்த ஆர்வமும், சமய அறிவும், உலக அறிவும் இனிது விளங்கும். அறுபத்தாறு ஆண்டுகள் இவ்வுலக வாழ்வில் இருந்த திரு ஐயரவர்களின் பிரிவை எண்ணி எண்ணற்றோர் வருந்துகின்றனர். இவர் போன்ற பெரியார் இன்னும் எத்தனை ஆண்டு உயிர் வாழ்ந்திருப்பினும் மக்களுலகிற்குப் பெரு நன்மை விளைதல் கூடுமன்றோ? எத்தனை நாள் வாழ்ந்தாலும் ஒரு நாள் இறைவன் திருவடியை அடையவேண்டுவதே மக்களுடலெடுத்தார் கடனகும் என்ற கொள்கையைக்கொண்டு மன ஆறுதல் பெறுவோம. இப்பெரியாரின் அடிச்சுவட்டைப பின்பற்றி இந்திய வாலிபர்கள் முன்னேற முயல்வாராக.

## எண்டிசைக்காட்சி.

### கொழும்பில் சங்கம்.

கொழும்பிலும் அதைச் சேர்ந்த மற்றைய ஊர்களிலும் தனவணிகச் செல்வர்கள் பல்லாண்டுகளாக வட்டித் தொழிலும் வியாபாரமும் செய்து வருகின்றனர். சங்கமாகச் சேர்ந்து காரியங்களை நடத்தும் முறை இல்லாவிடினும நகரத்தார் என்ற ஹோதாவிலேயே காரியங்கள் நடைபெற்று வந்தன. இப்பொழுது காலத்தின் நடைமுறைகளைப் பின்பற்றி "சிலோன் நாட்டுக்கோட்டைச் செட்டியார் அசோசியேஷன" எனும பெயரோடு ஒரு சங்கங்கண்டுள்ளார்கள். இதன் மூலமாக தங்கள் வியாபாரத்திற்கு வேண்டிய நலன்களைப் பெறுதற்கு வேண்டிய முயற்சிகள் செய்யப்பெறுமென்றறிகின்றோம. சங்கம் நீடூழி நின்று நிலவி நலம் பல நல்க இறைவனை வாழ்த்துவோம்.

### அடக்குமுறை.

புதுக்கோட்டையிலிருந்து வெளிவரும "ஜனமித்திரன்" எனும் வாரப் பத்திரிகையின் ஆசிரியர் மீது அச்சமஸ்தானத்தார் ராஜத்துவேஷ வழக்குத் தொடுத்திருந்ததையும் கீழ் கோர்ட்டில் அவர் தண்டிக்கப்பெற்று மேல் கோர்ட்டுக்கு அப்பீல் செய்து கொண்டதையும் அன்பர்கள் அறிவார்கள். சீப் கோர்ட்டு நீதிபதிகள் கீழ்க்கோர்ட்டுத் தீர்ப்பை உறுதிப் படுத்திவிட்டனர். புதுக்கோட்டை சமஸ்தான வாரிஸ் பாத்திய சம்பந்தமாகச் சில கட்டுரைகள் அப்பத்திரிகையில் வெளிவந்ததே பிரஸ்தாப வழக்கிற்குக் காரணமாகும். தற்பொழுது ஐரோப்பாவிலிருந்துவரும் புதுக்கோட்டை அரசருக்கு ஆஸ்திரேலிய மனைவியின் மூலமாகப் பிறந்த பிள்ளை அச்சமஸ்தான அரசராக வர உரிமையுடையதென்பதே அவ்வியாசங்களின் கருத்தாகும். இது எவ்வாறு ராஜத்துவேஷமாகுமென்பதை யாமறியக் கூடவில்லை. பிரஸ்தாப நபருக்குப் பட்டமளிக்கக் கூடாதென புதுக்கோட்டை மகாஜன மகாநாட்டிலும் தீர்மானம் நிறைவேறியது. ஜனமித்திரன் ஆசிரியர் எழுதியது ராஜத்துவேஷமாயின், பிரஸ்தாப தீர்மானமும் ராஜத்துவேஷமான தன்றோ? அங்கு கூடியிருந்தோர் அனைவர் மீதும் வழக்குத் தொடர வேண்டுமல்லவா? புதுக்கோட்டை சமஸ்தானப் பிரஜைகளுக்குத் தங்கள் மன்னரை நிர்ணயிக்கும் உரிமையுண்டு. சீப் கோர்ட்டாரது தீர்ப்பு அவ்வுரிமையைப் பறிப்பதாயிருக்கின்றது. இவ்வித அடக்குமுறைகளால் பொதுஜன அபிப்பிராயத்தை அடக்கிவிடலாமென அச்சமஸ்தான அதிகாரிகள் நினைப்பார்களாயின் அவர்களது எண்ணம் ஈடேருதென்பதை அவர்கள் அறிந்துகொள்ளவேண்டும்.

### இலங்கை இந்தியர்.

இலங்கையர்க்கு இன்னுஞ்சில உரிமைகள் வழங்குவது பற்றி விசாரித்துச் சிபார்சு செய்ய ராயல் கமிஷன் ஒன்று நியமிக்கப்பெற்று அக்கமிஷனும் இலங்கையில் தற்போது விசாரணை நடத்திவருகின்றது. இலங்கை இந்தியரின் சார்பாகச் சிலர் அககமிஷன் முன் தோன்றி சாட்சியங் கொடுத்திருக்கின்றனர். இலங்கையில் வதிந்துவரும் இந்திய மக்களின் ஜனத்தொகை இலங்கையின மொத்த ஜனத்தொகையில சற்றேறக்குறைய நாலில் ஒரு பாகமெனக் கூறலாம். இலங்கை வியாபாரத்தில் பெரும் பகுதி இந்தியர் வசமே இருந்து வருகின்றதென்பதை எவரும் மறுக்க முடியாது. இலங்கைத் தோட்டங்களில் பெரும்பாலும் இந்தியத் தொழிலாளர்களே வேலை செய்து வருகின்றனர். இலங்கை யாசாங்கத்தின் வருமானத்தில் பெரும்பகுதி இத்தோட்டங்களின் மூலமாகவே கிடைத்து வருகின்றதென்பது மிகையாகாது. இலங்கை வியாபாரத்திற்கும், அரசாங்க வருமானத்திற்கும காரணமாயிருந்துவரும் இந்தியர்களின் நலவுரிமைகள் நன்கு பாதுகாக்கப்பட வேண்டுவது அவசியமாகும். தற்பொழுது இலங்கைச் சட்டசபையில் இந்தியர்களுக்கென இரு ஸ்தானங்களே வழங்கப்பட்டுள்ளன. இந்தியர்களின ஜனத்தொகையையும் முக்கியத்தையும கவனிக்குமிடத்து இவ்விரு ஸ்தானங்களும் மிக மிகக் குறைவென்றே சொலல வேண்டும். கமிஷன் முன் சாட்சியங் கொடுத்த அன்பர்கள் ஐந்து ஸ்தானங்கள் வழங்கப்பட வேண்டுமென்று கூறியிருககின்றனர். இக்கோரிக்கை மிதமான கோரிக்கையேயாகும். இந்தியர்களின் நல உரிமைகளை நனகு பாதுகாக்க அங்குள்ள இந்தியர்கள தீவிரமாக முயற்சிப்பார்களென்று நம்புகிறேன்.

### நல உரிமைத் தொண்டர் சங்கம்.

நாளிது கார்த்திகைத்திங்கள் க௩-ம் நாள் ஞாயிற்றுக்கிழமை மாலை ௫-௩0 மணிக்கு காரைக்குடி 'நல உரிமைத் தொண்டர்சங்கத்தில் குமரன் ஆசிரியர் திரு. சொ. முருகப்ப செட்டியாரவர்கள் தலைமையில் அரு. சோமசுந்தரன் செட்டியார் நகைச்சுவையுடன் 'நமது முன்னேற்றம்' என்பது பற்றியும், தாமஸ் பாலையா 'நிர்மாணத் திட்டம்' என்பது பற்றியும் சொற் பெருக்கிட்டனர். தலைவர் முன்னுரையில் நாட்டார் நகரத்தார் முன்னேற்றம் அவசியம் என்பதை வற்புறுத்தியும் முடிப்புரையில் 'தீண்டாமை', 'ஆலய அக்கிரமங்கள்', 'பிராமணீயம்' என்பனபற்றியும் வெகு அழகாக சொற்பொழிவு செய்தார்கள்.



## கடிதங்கள்.

### தேவகோட்டை.

பிரிவு உபசாரம்:— திரு. மெ. சி. மாணிக்கவாசகன் அவர்கள் அந்நிய நாடு செல்லுவதை முன்னிட்டு திரு ராம. அருணசலன் அவர்கள் தலைமையில் ஓர் கூட்டம் கூடிற்று, அஞ்ஞான்று திருவாளர்களான வெ. மு. சோம. இராமநாதச் செட்டியார், மு. அ. சுப்ரமண்யச் செட்டியார், கரு. கதி. நாச்சியப்ப செட்டியார், இராட்டினப் புலவர் முருகன் ஆதியோர் அவர்களது "பிரிவாற்றமை" குறித்து மிக உருக்கமாகப் பேசினர்கள். தலைவர் அவர்கள் முடிவுரை கூறினர்கள். திரு. வெ. மு. சோம. இராமநாதச் செட்டியார் ஓர் தேக்கச்சேரிநடத்தினர்கள். வந்திருந்த அனைவோருக்கும் சிற்றுண்டி, டீ வழங்கப்பெற்றது, என்று ஓர் நிருபர் எழுதுகிறார்.

ஃ ஃ

### அலவாக் கோட்டை.

நிகழும் பிரபவ-ஞூ புரட்டாதி மீ ௩௨ முதல் இவ்வூர் நமது தனவைசிய வாலிபர்களுடைய நன்முயற்சியினல் பாரதி விலாஸ் பாட்மிண்டன் கிளப் என்ற பெயருடன் ஓர் சங்கம் நடைபெற்றுவருகிறது. ஆரம்பம் செய்து சின்னுட்களேயாயினும் இதற்குள் அவர்கள் மிகத் திறமையாக விளையாடுதல் பாராட்டத்தக்கது. இந்த விளையாட்டேயாயினும் தேகப் பயிற்சிக்கு மிகவும் உபயோகமென்பதை ஒவ்வொருவரும் ஒப்புக்கொள்வார்கள். ஆகலான் நமது தனவைசிய வாலிபர்கள் யாவரும் இதில் சேர்ந்து இன்னும் நன்ருக நடைபெறுமாறு செய்ய வேண்டுகிறேன், என ஒரு நண்பர் எழுதுகிறார்.

ஃ ஃ

### விண்ணுற்றார்.

சுயமரியாதை பத்திராதிபர் வேளைக்கிழார் க. அருணசலனர் இல்லக்கிழத்தி திரு. சிவகாமி அம்மையார் க௯—கக—௨௭ தேதி சனிக்கிழமை இரவு சொந்த ஊராகிய வேளாங்கண்ணியில் இறைவன் திருவடிநீழலையடைந்தார். அன்னருக்கு இரண்டு குமாரர்களும், ஓர் குமாரியும, நான்கு பேரன்களும் இரண்டு பேத்திகளும இருக்கின்றனர். துக்கத்தில் மூழ்கியிருக்கும்அக்குடும்பத்தாருக்கு தமது அனுதாபத்தைத் தெரிவித்துக கொள்ளுவதாக ஒரு நிருபர் அறிவிக்கிறார்.

ஃ ஃ

### கோ நகர்.

ரோட்டு வசதி:—இவ்வூருக்கும் ஆத்தங்குடிக்கும் ரோட்டு முன்னுள்ளதை இதுகாலை விசாலமாகச் செய்து வருகின்றனர்.

வெய்யோன் கிரணம்:—கார்த்திகை மாதமாகஇருந்தபோதிலும்சித்திரைத் திங்களின் காட்சியை வெய்யோன் தெளிவாக விளக்கிக்காட்டுகிறான். குளிர் அதிகமாகவே இருக்கிறது என திரு. பி. மு. சுப்பிரமணியன் எழுதுகிறார்.

கற்பக விநாயக கலாசாலை மாணவர் சபை:—நாளிது கார்த்திகைமீ பத்தாம் நாள் கற்பக விநாயக கலாசாலைத் தலைமையாசிரியர் எஸ். ஆழ்வாரையங்கார் தலைமையில் திருவாளர்களான ந. இராஜமாணிக்கம், இராமகிருஷ்ணன், அ. கந்தசாமி, சு. கிருஷ்ணன், சேக. ஐயாற்றுப்பிள்ளை, பி.மு. பி. சுப்பிரமணியன், சு. மு. இராமசுப்பிரமணியன் முதலானவர்கள்முறையே "ஊக்கமது கைவிடேல்" "எண்ணெழுத் திகழேல்" "ஏற்பதிகழ்ச்சி" "மதுரை திருநகரம்" "பொறுமை" "வறுமை" "கல்வி" என்ற விஷயங்களைப்பற்றி நீண்டநேரம் பேசினபிறகு தலைவர்கள் முடிப்புரையுடன் வந்தன வாழ்த்துக்கூற சபை நிறைவெய்தியது.

## அடிகளின் உண்மை வாழ்வு.

பகுதி ௬.
அத்தியாயம் ௨௭.

எண்ணத்திலும் பேச்சிலும் செயலிலும் பிர்மசரியத்தை அனுஷ்டிக்க நான் பெரிதும் ஆவலுள்ளவனயிருந்தேன். அதைப்போலவே சத்தியாக்ரகப் போராட்டத்தில் எவ்வளவு அதிக காலத்தைச் செலவிடஇயலுமோ அவ்வளவு காலத்தைச் செலவிட வேண்டுமென்பதிலும் என்னில் பரிசுத்தத்தன்மையை வளர்த்து என்னை அப்போராட்டத்திற்குத் தகுதியுள்ளவனக்கிக் கொள்வதிலும் ஆவலுள்ளவனயிருந்தேன். எனவே உணவு விஷயத்தில் பல மாற்றங்கள் செய்யவேண்டுவதும் சிலநிபந்தனைகள் ஏற்படுத்திக்கொள்ள வேண்டுவதும் அவசியமாயிற்று. முன்னர் ஏற்பட்ட மாற்றங்கள் பெரும்பாலும் சுகாதார விதிகளை ஆதாரமாகக் கொண்டே ஏற்பட்டன. ஆனல் புதிய சோதனைகள் மதக் கொள்கைகளை முன்னிட்டுச் செய்யப்பட்டன.

உபவாசமிருத்தலும் உணவைக் குறைத்தலும் எனது வாழ்க்கையில் அதிக முக்கியமான மாறுதல்களைச் செய்தன. மனிதரிடத்துப் பொதுவாக காம இச்சையும் வாய் ருசியை நாடும் இயற்கையும் ஒன்ருக இருந்துவருகின்றன. அவ்வாறேதான் என் விஷயத்திலும் இருந்துவந்தது. வாய்ருசியையும் காமஇச்சையையும்கட்டுப்படுத்தமுயற்சித்ததில் எனக்குப் பல கஷ்டங்கள் ஏற்பட்டிருக்கின்றன. இப்பொழுதுங் கூட அவைகளை முற்றும் ஜெயித்துவிட்டேனென நான உரிமைபாராட்டிக் கொள்ள முடியாது. நான் ஒரு பெருந்தீனிக்காரனென என்னைக் கருதியிருக்கின்றேன். நான் மட்டுப்படுத்தி இருக்கிறதாக அன்பர்கள் கருதியிருப்பவைகள் அவ்வாறு எனக்கு எக்காலத்திலும் தோன்றினதில்லை. நான் தற்போதிருக்கும் நிலைக்கு வருமாறு உணவு முதலியவற்றைக் குறைத்துக் கொள்ளும் முயற்சியில் தவறியிருப்பேனயின் மிருகங்களைக் காட்டிலும் கேவலமான நிலையை அடைந்து வெகு காலத்திற்கு முன்னரே இறந்து ஒழிந்திருப்பேன். எப்படியிருந்தபோதிலும் எனது தவறுகளைப் போதிய அளவு நான் உணர்ந்திருந்ததால் அத்தவறுகளைப் போக்க நான் பெரும் முயற்சிகள் செய்தேன். அதன்பயனுக இவ்வுடலோடு இவ்வளவு காலம் வாழ்ந்து என்னல் இயன்ற அளவு சிறிது ஊழியம் செய்துவந்திருக்கிறேன்.

எனது குறைகள் எனக்கு நன்கு தெரிந்திருந்தாலும் எதிர்பாராமல் அன்பர்கள் மத்தியில் இருக்க நேருவதாலும் பழங்கள் புசிக்கும் முறையைத் துவங்கினேன். அல்லது ஏகாதசி தினத்திலும் ஜென்மாஷ்டமி தினத்திலும் இவைபோன்ற விடுமுறை நாட்களிலும் உபவாசமிருத்தலை அனுஷ்டிக்கத் துவங்கினேன். நான் பழ உணவு கொள்ளத் துவங்கினேனெனினும், உணவை மட்டுப்படுத்தல் எனும் முறைகொண்டு நோக்கின் பழ உணவுக்கும தானிய உணவுக்கும் அதிக வேறுபாடு இருந்ததாக எனக்குத் தோன்றவில்லை. இருவித உணவுகளிலும் ஒரே விதமான வாய் ருசி இன்பத்தில் ஆழ்ந்துவிடலா மென்பதையும், பழ உணவில் பழகிவிட்டால் தானிய உணவைக் காட்டிலும் அதில் அதிக ருசியை நாடலாமென்பதையுங் கண்டுகொண்டேன். எனவே விடுமுறை நாட்களில் உபவாசமிருத்தல் அல்லது ஒரு வேளை உணவுமட்டும் கொள்ளுதல் அதி முக்கியமெனக் கருதலானேன். மேலும் தியானம் செய்யும் சந்தர்ப்பம் ஏதாவது நேர்ந்தால் அதனை உபவாசமிருப்பதற்கு உபயோகித்துக் கொள்ள நான் பெரிதும் விரும்புவதுண்டு.

இம்முறைகள் காரணமாக உடல் பெரிதுமகுறைந்ததையும் உணவுஅதிக ருசியாயிருப்பதையும் பசி அதிகரிப்பதையும்கண்டுகொண்டேன். புலன்களைக் கட்டுப்படுத்துவதற்குஉபவாசத்தைஓர் சாதனமாகக் கொள்வதுபோல் அதனை இன்பங்களில் மூழ்குவதற்கும் ஓர் சாதனமாகச் செய்துகொள்ள முடியும் எனும் உண்மை எனக்குப் புலனயிற்று. இவ்வதிசயிக்கத் தக்க உண்மைக்குச் சான்ருக நான் பிற்காலத்தில் நிகழ்த்திய சோதனைகளைக் கூற முடியும். எனது உடலைச் சீர்திருத்தி நன்கு பழக்க நான் விரும்பினேன். எனினும் அப்பொழுது புலனடக்கமும் வாய் ருசி அடக்கமும் பெற வேண்டுமென்பதே எனது முக்கிய நோக்கங்களாக இருந்துவந்தமையால் வேளைக்கொரு உணவாகத் தெரிந்தெடுத்துக் கொண்டுவந்தேன். அத்தோடு உணவின் அளவையும் குறைத்துக்கொண்டு வந்தேன். எனினும் வாய் ருசியை நாடும் இயல்பு என்னை விட்டு அகலவேயில்லை. ஒருவகை உணவைக் கை விட்டு மற்றொரு வகை உணவை மேற்கொள்ளுங்காலத்து பிந்தியது முந்தியதைக் காட்டிலும் அதிக ருசியாகவே இருக்கும்.

இச்சோதனைகளெல்லாம் நான் செய்யுங்காலத்து எனக்குப் பல அன்பர்கள் இருந்தார்கள். ஹெர்மான் ஹாலன்பாக் என்பவர் அவர்களுள் முதன்மையாவார். இவ்வன்பரைப்பற்றி தென்னப்பிரிக்கா சத்தியாக்ரகச் சரித்திரத்தில நான் முன்னரே குறிப்பிட்டுள்ளேன். எனவே அவரைப்பற்றி நான் இங்கு விரிவாகக் கூறப்போவதில்லை. ஹாலன்பாக்அவர்கள் உபவாசமிருத்தலிலும் உணவுமாற்ற விஷயத்திலும் எப்பொழுதும் எனக்குத் துணைவராக இருந்துவந்திருக்கிறார். சத்தியாக்ரகப் போர் உன்னத நிலையிலிருந்து வந்த காலத்தில் நான் அவருடன் அவரது சொந்த இடத்தில் வசித்து வந்தேன். உணவில் செய்யப்படும் மாற்றங்களைப்பற்றி நாங்கள் விவாதிப்போம். புதிய வகை உணவிலிருந்து பழைய வகை உணவைக்காட்டிலும் அதிக இன்பம் பெறுவோம், இது போன்ற சம்பாஷணை அக்காலத்தில் இன்பம் பயப்பதாகத் தோன்றிற்று. அவ்வாறு சம்பாஷித்துக் கொண்டிருத்தல் முறையல்லவென்று அப்பொழுது எனக்குத் தோன்றவில்லை. உணவு இன்பத்தில் ஆழ்ந்திருந்தது தவறு என்பதை அநுபவம் எனக்கு நன்கு போதித்து விட்டது. வாய் ருசியைப் பூர்த்தி செய்வதை முன்னிட்டு ஒருவன் உணவு கொள்ளலாகாது. உடலில் உயிரிருப்பதை முன்னிட்டே உணவுகொள்ளவேண்டும். புலன் இன்பங்களுக்குச் சாதனமாயிருக்கும் ஒவ்வொரு உறுப்பும் சரீரத்திற்கு ஊழியம் புரிகின்றது. அச்சரீரத்தின் மூலமாக ஆன்மாவுக்கு ஊழியம் புரிகின்றது. இதன் பயனுக அவ்வுறுப்பிற்குள்ள தனி இன்பம் மறைந்து போகின்றது. அதன் பின்னர் தான் அவ்வுறுப்பு எவ்வாறு வேலை செய்ய வேண்டுமென இயற்கை கருதி யிருந்ததோ அவ்வாறு வேலை செய்யத் துவங்குகின்றது.

இயற்கையோடியைந்த இந் நிலையெய்துதற்கு எவ்வளவு அதிகமான தியாகம் செய்திடினும் அது பெரிதாகாது. எவ்வளவு சோதனைகள் நடத்தினும் அவை குறைவாகவே காணப்படும். ஆனல் துரதிர்ஷ்டவசமாக தற்போதைய உலகப்போக்கு அதற்குமுற்றும் மாருக இருந்து வருகின்றது. அழிந்துபோகும் நமது உடலைப்பேணுவதற்காகப் பல இதர உயிர்களைத் கொன்று இன்னும் சிறிதுகாலம் நமது உடலின் ஜீவியத்தைப் பெருக்கிக் கொள்ள முயலுகின்றோம். இதன் பயனுக நிகழ்வதென்ன? நம்மையே நாம் கொலை செய்து கொள்ளுகின்றோம். அதாவது நமது உடலும் ஆன்மாவும் அழியும்படி செய்கின்றோம். ஓர் பழைய வியாதியைக் குணப்படுத்த முயற்சிக்கையில் நூற்றுக்கணக்கான புதிய வியாதிகளை உற்பத்தி செய்கின்றோம். புலனின்பங்களை அநுபவிக்க முயற்சிக்கையில் இறுதியில் அவ்வின்பங்களை அநுபவிக்கும் சக்தியையுங் கூட இழந்து விடுகின்றோம். இவைகளெல்லாம் நம் கண் முன் நிகழ்கின்றன. எனினும் கண்களிருந்தும் அவற்றைக் காணமலிருப்பின் பயனென்ன?

இவ்வாருக உணவு முறைகளில் மாற்றங்களும் சோதனைகளும் செய்வதற்குரிய காரணங்களையும் பின்னர் ஏற்பட்ட கொள்கைகளையும் விளக்கிவிட்டேன். இனி உணவு முறையில் செய்த முயற்சிகளைப்பற்றி விரிவாகக் கூறுகின்றேன்.

## உள்ளூர்ச் செய்தி.

| | |
|---|---|
| சென்னை உண்டியல் வட்டம் | ௦—௪—௦ |
| இரங்கூன் உண்டியல் வட்டம் | ௪—௦—௦ |
| சென்னை கடப்பு வட்டி | ௦—௧௦—௪ |
| பவுன் | ௧௩—௮—௦ |

சுகாதார சங்கம்:—இச்சங்கத்தின் வருடாந்தரக் கூட்டம் ஒன்று நாளிது திங்கள் இருபத்தொன்றும் நாள் (௩—௧௨—௨௭) செவ்வாய் அன்று மாலை ௬-மணி முதல் இவ்வூர் இந்துமதாபிமான சங்கக் கட்டிடத்தில் கூடும். அதுகாலை புதுவருடத்துத்தலைவர் முதலியதேர்தல்கள் நடைபெறும். அன்பர்கள் வரவைஎதிர்பார்க்கிறேன், என்று காரியதரிசி ஆவி. லெ. அருணசலச் செட்டியார் எழுதுகிறார்.

பொதுக்கூட்டம்:—நிகழும் பிரபவ ஆண்டு கார்த்திகைத் திங்கள் ௧௮-ம் நாள் சனிக்கிழமையன்று மாலை ௫-௩௦ மணிக்கு முத்துப்பட்டணத்தில் திருவாளர் குழ. சிங்காரவேலுப்பிள்ளை அவர்கள் தலைமையின்கீழ் "ராயல் கமிஷனும், தமிழ் மக்களின் கடமையும்" என்ற விஷயத்தைப் பற்றி ஆலோசித்து முடிவு செய்ய ஓர் பொதுக் கூட்டம் கூடும். அவ்வமயம் அன்பர்களின் வரவை எதிர்பார்க்கிறோம், என காரைக்குடி சம உரிமைச் சங்கத்தார் அறிவிக்கின்றனர்.

## தந்திச்செய்தி.

சைகோன், கார்த்திகைமீ ௧௫௨

| | |
|---|---|
| உண்டியல் விலை | நூற்றுநாற்பது. |
| சிங்கப்பூர் வட்டம் | பத்து. |

பினங்கு, கார்த்திகைமீ ௧௫௨

| | |
|---|---|
| உண்டியல் விலை | நூற்று ஐம்பத்துநான்கு. |
| ஈயம் விலை | நூற்றுமுப்பத்தைந்து. |
| ரப்பர் விலை | தொண்ணூற்ருறு. |

## கப்பற்செய்தி.

'எலிபண்டா'க் கப்பல் நாளிது கார்த்திகைத் திங்கள் ௧௭-ம் நாள் வெள்ளிக்கிழமையன்று சென்னையிலிருந்து இரங்கூனுக்குப் புறப்படுகிறது.

'ரோஸெ'க் கப்பல் நாளிது கார்த்திகைத் திங்கள் ௧௯-ம் நாள் ஞாயிற்றுக் கிழமையன்று நாகப்பட்டினத்திலிருந்து மலாய் நாட்டிற்குப் புறப்படுகிறது.

## அயலகம்.

ஐரோப்பாவில் தற்போது ௬டு லட்சத்து ௰௨ ஆயிரம் துருப்புகளிருக்கின்றனவாம்.

ஃ ஃ

சிலதினங்கள் முன் லண்டன் லார்டு சபையில் யுத்த மந்திரி இந்தியாவுக்கு வருவதைப் பல அங்கத்தினர்கள் கண்டித்துப் பேசினர்கள்.

ஃ ஃ

பெல்ஜியம் ராணுவ சர்விஸ் காலத்தைக் குறைக்கும் விஷயமாய் ஏற்பட்ட அபிப்பிராய பேதங்காரணமாக மந்திரி சபை ராஜிநாமாச் செய்து விட்டது எனத் தெரிகிறது.

ஃ ஃ

அமெரிக்காவிலுள்ள நியூ இங்கிலாந்து என்ற விடத்தில் நேர்ந்த வெள்ளத்தின் பயனாக சுமார் ௬௦ லட்சம் பவுன் வரையில் நஷ்டமெனக் கணக்கிடப்பட்டிருக்கிறது.

ஃ ஃ

இங்கிலாந்தில் இந்தியர்களுடைய உரிமைகளைப் பாதுகாப்பதற்காக 'இந்தியப் பாதுகாப்புச் சங்க'மொன்று லண்டனில் ஏற்படுத்தப் பட்டிருக்கிறது எனத் தெரிகிறது.

ஃ ஃ

ராணுவ சர்விஸ் காலத்தைக் குறைக்கும் விஷயமாக ஏற்பட்ட அபிப்பிராய பேத காரணமாக பெல்ஜியம் மந்திரி சபை ராஜிநாமாச் செய்துவிட்டது எனத் தெரிகிறது.

ஃ ஃ

வங்காள அவசரச் சட்டப்படி கைது செய்யப்பட்டவர்களெல்லாம் இனிக்குற்றத் தன்மையான காரியங்கள் செய்யச் சதியாலோசனை செய்யாமலிருக்கும் பொருட்டே கைது செய்யப்பட்டிருக்கிறார்களென்று இந்தியா மந்திரி காமன்ஸ்சபையில் கூறினர்.

ஃ ஃ

சுயராஜ்யக் கட்சித் தலைவர் மோதிலால் நேரு அரசியல் கமிஷன் சம்பந்தமாக வெளியிட்ட அபிப்பிராயத்தை இரண்டொரு பத்திரிகைகளைத் தவிர வேறு எந்த பிரிட்டிஷ் பத்திரிகையும் பிரசுரிக்க வில்லையென்று லண்டன் செய்தி ஒன்று எட்டுகிறது.

ஃ ஃ

ஒலிம்பியாவில் மோட்டார் கண் காட்சி நடந்தபோது சுமார் முப்பது வயதுள்ள ஒரு பெண் மிகத் துணிகரமாக மோட்டார் ஒன்றைத் திருடிக்கொண்டு போய் வழியில்லாமல் இடையிலே விட்டு விட்டு பின்தொடர்ந்து வந்த போலீசாரையும் ஏமாற்றிச் சென்று விட்டாளாம்.

ஃ ஃ

லண்டன் இந்தியா மந்திரி சபை அங்கத்தவரான ஸ்ரீசுல்தான்அகமத் மல்லிக் என்பவரிடம் அரசியல் கமிஷன் நியமனத்தைப் பற்றி இந்தியா மந்திரி யோஜிககவில்லையாம். அதனால் ஷை அங்கத்தினர் தம் பதவியை ராஜிநாமாச் செய்துவிட்டுத் தாய் நாடு வருகிறார் என ஒரு செய்தி கூறுகிறது.

ஃ ஃ

லண்டனிலுள்ள குட் ஈயர் கம்பெனியார் மோட்டார் டயர்களின் விலையில் ௧௦௦-ச்குப் பத்து விகிதமும் ஸைக்கிள் டயர்களின் விலையில் ௧௦௦-க்கு ௧௫ விகிதமும் குறைவேற்படுத்துவார்களென்றும் டன்லப் கம்பெனியார் ௧௦௦-க்கு ௫ விகிதம் விலையைக் குறைத்திருக்கின்றனரென்றும் ஒரு செய்தி எட்டுகிறது.

ஃ ஃ

பாஷைகளைக் கற்க லண்டனுக்கு வந்தவர்களெனச் சொல்லிக்கொள்ளும் ஒரு வாலிபனும் ஒரு பெண்ணும் அன்னிய நாட்டு அரசாங்கத்தாருக்கு உபயோகமானதும் பிரிட்டிஷ் அரசாங்கத்தாருக்குக் கெடுதலை யுண்டுபண்ணக் கூடியதுமான தகவல்களைச் சேகரித்து வந்ததாகக் குற்றஞ் சாட்டப்பட்டுப் போலீசாரால் கைது செய்யப் பட்டிருக்கிறார்களாம்.

ஃ ஃ

சில தினங்கள் முன் ஜப்பான் ராணுவம் அணிவகுத்து நின்றதைஷை அரசர் பார்வையிட்டார். அப்பொழுது ஒரு சிப்பாய் தீண்டாதவர்களாகிய (இடா) தம் ஜாதியாரின் நிலைமையை உயர்த்த வேண்டுமென்று ஒரு மகஜரை அரசரிடம்கொடுக்க தாம் நின்ற வரிசையினின்றும் முன் வந்தார். அதற்காக ராணுவச் சட்டப்படி அவருக்கு மூன்று வருஷம் தண்டனை விதிக்கப்படுமென்று எதிர் பார்க்கப்படுவ தாய்த் தெரிகிறது.

---

## தாயகம்.

பிஜித் தீவில் இந்தியர்களுக்காக அரும்பாடுபட்ட டாக்டர் மணிலால் பாரிஸ்டர் வேலை பார்ப்பதற்காக ஏடனுக்குச் சென்றிருக்கிறார் என அறிகிறோம்.

ஃ ஃ

அப்துல்ரஷித்தின் பிரேத ஊர்வலத்தின் போது ஏற்பட்ட கலவரத்தை யொட்டி நாளிது நவம்பர் மாதம் ௨௩ந்தேதி போலீசார் ௪௦ முஸ்லிம்களைக் கைது செய்தனர் எனத் தெரிகிறது.

ஃ ஃ

ஆம்தாபாத் சத்தியாக்கிரக ஆச்ரமத்தின் ஊழியரான ஜீவன்லால் கோபாலும் ஒரு மார்வாரியும் சட்டவிரோதமாக அபினியை வைத்திருந்ததாக ௩ மாதம் சிறைவாச தண்டனை விதிக்கப்பட்டார்களாம்.

ஃ ஃ

அலகாபாத்திலுள்ள ஒரு நகை வியாபாரியின் கடையில் சில நகைகளைத் திருடிய 2 வெள்ளைய சோல்ஜர்கள் தம் சம்பளம் செலவுக்குப் போதாததால் தாங்கள் திருடியதாக மாஜிஸ்திரேட்டிடம் கூறினார்களாம்.

ஃ ஃ

கல்கத்தா சர்வ கலாசாலைக்கு சமுஸ்கிருதம் போதிக்க ஒரு இந்திய ஆசிரியரையே நியமிக்க வேண்டுமென்ற பிரேரேபணை சங்கத்தில் ஓட்டுக்குவிடப்பட்டுத் தோற்றுப் போயிற்றும்.

ஃ ஃ

கல்கத்தா சென்ட்ரல் ஜெயில் அச்சுக் கூட ரோல் கீபரான ஒரு வங்காளி இரண்டு லட்சம் ரூபாய் வரை நம்பிக்கை மோசம் செய்து பொய்க் கணக்கு எழுதி விட்டதாகப் போலீஸாரால் தேடப்பட்டு வருகிறார்.

ஃ ஃ

நோவகாலி ஜில்லாவில் பிரபல காங்கிரஸ் ஊழியரான ஸ்ரீமான் மகேந்திரதாஸ் ௧௯௨௪ம் வருஷத்திலிருந்து பந்தோபஸ்தில் வைக்கப்பட்டிருந்து சில தினங்கள் முன் நிபந்தனையின்றி விடுதலை செய்யப் பட்டார்.

ஃ ஃ

சென்ற நவராத்திரியின்போது ஜபல்பூரில் நடந்த கலவரத்தை யொட்டி ஜபல்பூர் ஹிந்து சபைக் காரியதரிசியும் ஒரு ஹிந்து வாரப்பத்திரிகையின் ஆசிரியருமான திரு நரசிங்க தாஸ் மீது வழக்குத் தொடரப்பட்டிருக்கிறதாம். இவர்தான் பட்டுவாக்காலி சத்தியாக்கிரகத்தற்கு ௫௦ பேரை அனுப்பினராம்.

ஃ ஃ

ஒரு போலீஸ் சப் இன்ஸ்பெக்டரும் ஒரு கிராம டபேதாரும் ஒரு மாதை மானபங்கப் படுத்தியதாகக் கல்கத்தா ஹைக்கோர்ட்டில் தொடுக்கப்பட்டிருந்த வழக்கில் சப் இன்ஸ்பெக்டருக்கு ஏழு வருஷக் கடுங்காவல் தண்டனையும் ரூ ௧௦௦௦ அபராதமும் டபேதாருக்கு மூன்று வருஷக் கடுங்காவல் தண்டனையும் ரூ ௧௦௦௦ அபராதமும் விதிக்கப்பட்டிருக்கின்றன.

ஃ ஃ

சமீபத்தில் டில்லியில் நடந்த மந்திரிகள் மகாநாட்டில் ராயல் கமிஷனுடன் ஒத்துழைக்கும்படி தத்தம் கட்சியினரைத் தூண்டும்படி அரசாங்கத்தார் மந்திரிகளை வேண்டிக் கொண்டதாகவும் பலர் தங்களால் சாத்தியமானவரை முயற்சி செய்வதாக வாக்களித்திருப்பதாகவும் வேறு சிலர் தாங்கள் பகிஷ்கார இயக்கத்தில் கலந்து கொள்ளாத போதிலும் தங்களுடைய கட்சியின் அபிப்பிராயம் எவ்விதமிருக்குமென்று தெரிவிக்கமுடியாதென்று சொல்லியதாயும் ஒரு செய்தி கூறுகிறது.

ஃ ஃ

கல்கத்தா ஹிந்துமதப் பிரசார சபையைச் சேர்ந்த இருவர் மதப்பிரசாரம் செய்யச் சில தினங்கள் முன் சினிமாப்படங்களுடன் பெட்டியாவுக்குப் புறப்பட்டார்கள். ஷை படங்களுடன் முகமதிய அரசர் காலத்தில் தங்கள் மதத்திற்காக உயிரைத் தியாகஞ் செய்த ௬ சீக்கியர்களுடைய படங்களுமிருந்தன. அதிகாரிகள் ஷை படங்களைப் பறிமுதல் செய்து மாஜிஸ்திரேட்டின் மேற்பார்வைக்கு அனுப்பியிருக்கின்றனராம். ஷையார்கள் பெட்டியா சப் டிவிஷனுக்குள் வர அனுமதிக்கப்படவில்லையாம். மேலும் அவர்களுக்கு ௧௪௪ பிரிவுப்படி தடை உத்தரவும் பிறப்பித்திருக்கிறார்களாம்.

ஃ ஃ

அலிப்பூர் டிப்டி மாஜிஸ்டிரேட் ஸ்ரீமான் குப்தா, ஒபீன் வழக்கில் தவருக நடந்ததாகக் குற்றஞ் சாட்டப்பட்டுக் கமிஷன் முன் விசாரிக்கப்பட்டு வருகிறார்.

ஃ ஃ

ராஜத்துவேஷக் குற்றஞ் சாட்டப்பட்ட மிஸ்டர் ஸ்பிராட் விடுதலை அடைந்ததைப் பாராட்ட நவம்பர் மாதம் ௨௫-ந்தேதி பம்பாயில் ஒரு பொதுக்கூட்டம் நடைபெற்றது.

ஃ ஃ

லக்ஷ்மணபுரி முனிசிபல் புதிய கட்டிடத்திற்கு ரூ௨௫௦௦௦. இனமாக யார் கொடுத்தாலும் அவருடைய பெயரை அக்கட்டிடத்திற்கு வைக்கப்படுமென்று ஷை முனிசிபாலிட்டியார் தீர்மானித்திருக்கிறார்கள்.

ஃ ஃ

பஞ்சாப் சட்டசபையார் செயற்கை நெய்யின் விற்பனை தடுக்கப்பட வேண்டுமென்றும் அதை விற்பவர்கள் பெரிய எழுத்தில் போர்டு எழுதிக் கட்டவேண்டுமென்றும் தீர்மானித்திருக்கிறார்கள்.

ஃ ஃ

சில தினங்கள் முன் புனாவைச் சேர்ந்த தலிகானில் இரண்டு முஸ்லீம்கள் இந்து விக்கிரகங்களை உடைக்க முயன்றதற்காக அவர்கள் மீது வழக்குத் தொடரப்பட்டு இரண்டு மாதம் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டிருக்கிறார்களாம்.

ஃ ஃ

ராஜீபக் கைதியான ஸ்ரீமான் பூரண சந்திர தாஸ் ஒரு மாத ரஜாவில் பலமான போலீஸ் பந்தோபஸ்துடன் அவர் சொந்த ஊருக்குப் போயிருக்கிறார். ஒரு மாதத்திற்குப் பிறகு அவர் பூரியில் பந்தோபஸ்தில் வைக்கப்படுவாரெனத் தெரிகிறது.

ஃ ஃ

இந்தியன் பாங்கியின் கிளை ஸ்தாபனமொன்றை ரங்கூனில் ஏற்படுத்தலாமாவென்பதைப் பரிசீலனை செய்வதற்காக இந்தியன் பாங்கியின் காரியதரிசியான ஸ்ரீமான் வித்தியாசாகர பாண்டியா சென்ற வெள்ளிக்கிழமை யன்று இரங்கூனுக்குப் புறப்பட்டிருக்கிறார்.

ஃ ஃ

பிரிட்டிஷ் பர்மா பெட்ரோலியம் கம்பெனியின் தலைமை ஸ்தலத்தை இந்தியாவுக்கு மாற்றி இந்தியர்களையே நியமிக்குமாறு வற்புறுத்தும் அங்கத்தவரைச் சந்தித்துப் பேச ஷை கம்பெனியின் மானேஜிங் ஏஜெண்டு இங்கிலாந்திலிருந்து இந்தியாவுக்கு வருகிறாராம்.

ஃ ஃ

லாகூர் 'ஜமீந்தார்' எனும் ஆங்கிலப் பத்திரிகையின் ஆசிரியரான ஜனுப் அப்கர் அலிமீது, ஆபாசமான விளம்பரத்தைப் பிரசுரித்ததாக வழக்குக்கொண்டுவரப்பட்டு ௫௦௦ ரூபாய் அபராதமும் தவறினால் ௩ மாதம கடுங்காவல் தண்டனையும் விதிக்கப் பட்டது. அவர் அபராதத்தைச் செலுத்தி விட்டார்.

ஃ ஃ

ஷோலாப்பூர் ஜில்லா போர்டில் பிராமண பிராமணரல்லாதார் கட்சி வேற்றுமை பலமாகவிருப்பதால் நிர்வாகம் சரிவர நடைபெறவில்லை. ஆகவே பம்பாய் அரசாங்கத்தார் டிசம்பர் மாதம் ௧௫-ந்தேதி முதல் அந்த ஜில்லா போர்டைக் கலைத்துவிட உத்தரவிட்டிருக்கின்றனர் என்றும், மூன்று வருஷங்களுக்கு ஷோலாப்பூர் கலெக்டரை அந்த ஜில்லா போர்டு-நிர்வாகத்தை நடத்த நியமித்திருக்கின்றனர் என்றும் தெரிகிறது.

ஃ ஃ

லாகூர் 'சியாசத்' ஆசிரியர் மீதும் அப்பத்திரிகையைச் சேர்ந்த மற்றவர்கள் மீதும் டாக்டர் முகம்மது ஆலம் எம். எல். வி. அவர்களால் ரூ ௧௨௦௦௦க்குத் தொடுக்கப் பட்டிருந்த வழக்கில் பிரதிவாதிகள் மன்னிப்புக் கேட்டுக்கொண்டனர். அந்த மன்னிப்புக் கடிதத்தை வாதி இஷ்டப்படி தயாரித்து ௩ நாளைக்குச் 'சியாசத்' பத்திரிகையில் முதற் பக்கத்தில் பகிரங்கமாக பெரிய எழுத்துக்களில் பிரசுரிக்கும்படி வாதி கேட்டுக் கொண்டதற்கிணங்க ஜட்ஜும் தீர்ப்புச் செய்திருக்கிறாரென்று ஒரு செய்தி எட்டுகிறது.

---

## தமிழகம்.

தூத்துக்குடி முத்துச்சலாபம் ஆரம்பதின முதல் சர்க்கார்பங்குக்கு சராசரி நாளொன்றுக்கு ரூ ௧௦௦௦ வருமானம் கிடைப்பதாகத் தெரிகிறது.

ஃ ஃ

கிறிஸ்துமஸ் வாரத்தில் சென்னையில் அகில இந்திய துறைமுக நிர்வாக சபைகளிலுள்ள இந்திய வியாபாரச் சங்கத்தினர் ஒரு மகாநாடு கூடுவதாக ஷை சங்கத்தினர் முடிவு செய்திருக்கிறார்களாம்.

ஃ ஃ

சென்ற ஒருமாத காலமாக உத்தம பாளையத்தைச் சேர்ந்த கோம்பையில் பிளேக் நோய் இருந்து வருவதாயும் இப்பொழுது கொஞ்சம் சௌகரியம் ஏற்பட்டிருப்பதாயும் தெரிகிறது.

ஃ ஃ

சிலதினங்கள் முன் மதுரையில் முத்தையாக் கோன் என்பவன் ஒரு கடையில் தீப்பெட்டிகளைத் திருடியதாகக் கொண்டுவரப்பட்ட வழக்கில் குற்றவாளிக்கு ஆறு மாதங் கடுங்காவல் தண்டனை விதிக்கப் பட்டதாகத் தெரிகிறது.

ஃ ஃ

விருத்தாசலம் தாலூக்காவில் ஒரு சிறிய ஆதித்திராவிடப் பெண் தனக்குப் பிறந்த ஒரு ஆண்குழந்தையை அது பிறந்த ௭, ௮, நாளைக் கெல்லாம் கிணற்றில் போட்டுக் கொன்றுவிட்டதாகப் போலீசாரால் ஒரு வழக்குத் தொடரப்பட்டிருக்கிறதாம்.

ஃ ஃ

சீமைச் சுண்ணாம்புமீது அமெரிக்க அரசாங்கத்தார் இறக்குமதி வரியை உயர்த்தியிருப்பதால் தென்னிந்தியாவில் ௩௦௦௦ பேர்களுக்கு வேலை கிடைக்கா தென்றும் மாகாண அரசாங்கத்தார் இந்தியா அரசாங்கத்தாருக்குத் தெரிவித்திருப்பாதாகத் தெரியவருகின்றது.

ஃ ஃ

சேலம் ஜில்லாவிலுள்ள ராமநாதபுரம் என்னும் கிராமத்திலுள்ள பெருமாள் என்னும ஆதித்திராவிடன் தன் மாட்டுப்பட்டியில் திருட வந்த ஒருவனைப் பிடித்ததற்காக ஓர் நிலம பரிசு கொடுக்கும்படி ஜில்லாக் கலெக்டருக்கு போலீஸ் சூப்பிரண்டண்டெண்ட் எழுதியிருப்பதாகத் தெரிகிறது.

ஃ ஃ

சில தினங்கள்முன் பட்டுக்கோட்டையில் லாகூர் விதவா விவாக சபையைச் சேர்ந்த பண்டித மேதா சாந்தி சொரூப வித்தியாலங்கார் இந்துக்களின் விவாக வழக்கங்கள் என்பதுபற்றி ஓர் உபந்நியாசம் செய்தார். அதன்பேரில் ஷை யூரில் விதவா விவாக சகாயசங்கம் என்ற பெயருடன் ஒரு சங்கம் நிறுவப்பட்டிருக்கிறதாம்.

ஃ ஃ

சென்னை ராயபுரம் ஆஸ்பத்திரியில் பல் வைத்திய இலாகாவில் வேலைபார்த்து வந்த அந்தோனி என்ற ஒரு வாலிபன் நவம்பர் மாதம் ௨௫-ந் தேதி திடீரென இறந்து போனான். அவனுடைய அறையில் 'கார்பாலிக் ஆசிட்' திராவகம வைத்திருந்த சீசா ஒன்று காலியா யிருந்ததால் ஷை ஆஸிடைக் குடித்து இறந்திருப்பானே என்று சந்தேகித்து போலீசார் விசாரணை நடத்திவருகிறார்களாம்.

ஃ ஃ

சில தினங்கள் முன் மதுரை அம்மன் கோவிலிலுள்ள முக்குருணி அரிசிப் பிள்ளையாருக்கு வெள்ளிக் கவசம் சாத்துவதற்காக ரூபாய் ௧௦ டிரஸ்டி ஆபீஸில் கட்டி ரசீது பெற்ற ஒரு தனவைசியர் ஷை ரசீதைக் கோயில் பட்டரிடம் கொடுக்க அவர் வாங்கி வைத்துக் கொண்டு சும்மாயிருந்து விட்டாராம். டிரஸ்டி கவசத்தை உடனே சாத்த வேணுமாய் உத்தரவு போட்டும் ஒன்றும் நடைபெற வில்லையாம்.

ஃ ஃ

சென்னையில் நடக்கப்போகும் பத்திராசிரியர்கள் மகாநாட்டில் ஆலோசனைக்குக் கொண்டுவரப்பட வேண்டிய விஷயங்களை ஆலோசித்து முடிவு செய்ய ஸ்ரீமான் எ. ரங்கஸ்வாமி ஐயங்கார், எ. ராமசாமி முதலியார், கே. பி. விஸ்வநாத ஐயர், ஜி. வி. கிருபாநிதி, ஆர். கணேசய்யர், சேஷகிரி ராவ், மந்தரேஸ்வர சர்மா முதலியோர்களடங்கிய ஒரு தனிக் கமிட்டி நியமிக்கப் பட்டிருக்கிறது.

---

